# ராம.சா.
# சாத்தப்பச்செட்டியார்
# அறநிலை

## நூற்றாண்டு விழா மலர்



நெற்குப்பை



5 – 5 – 1977

# ராம். சா.
# சாத்தப்பச் செட்டியார் அறநிலை

நெற்குப்பை

[ இராமநாதபுர மாவட்டம் ]

1010



# நூற்றாண்டு விழா மலர்

5-5-1977

# மலரும் மணமும்

நெற்குப்பை ராம. சா. அறநிலையம் தன்னாலியன்ற தொண்டுகளைக் கடந்த நூறாண்டுகளாகச் செய்து வருகின்றது. இறையருளாலும் பல பெரியவர்களின் ஆசியாலும், உள்ளூர் நகரத்தார்களின் நல்லாதரவாலும் எடுத்த முயற்சிகள் இடையறாது நடந்து வருவது மகிழ்ச்சி அளிக்கிறது.

தண்ணீர்ப் பந்தல் வைத்தும், மடம் கட்டியும், நந்தவனம் அமைத்தும், அன்னதானம் வழங்கியும், விழாக்கள் நடத்தியும், கல்விக்கூடங்கள் நிறுவியும் பொதுப்பணி புரிந்துவரும் இந்த அறநிலையம் தனது நூற்றாண்டு விழாவைச் சீரும் சிறப்புமாக நடத்த ஏற்பாடு செய்துள்ளது. நூற்றாண்டு விழாவையொட்டி வெளியிடப்பெறும் இம் மலருக்குப் பல அறிஞர் பெருமக்கள் மணம் அளித்துச் சிறப்பித்துள்ளனர். ஆன்மிகத்துறையிலும், இலக்கியத் துறையினும், கல்வித் துறையினும் சிறந்து விளங்கும் அறிஞர் பெருமக்கள் மிகக் குறைந்த கால அளவில் எங்களது வேண்டுகோளுக்கு இணங்கிக் கட்டுரைகளும், கவிதைகளும் வழங்கியுள்ளனர்.

அறப்பணி மேன்மேலும் சிறப்புற்றோங்க வேண்டுமெனும் நன்னோக்கில் பல நிறுவனங்களும், தனிப்பட்ட சில நண்பர்களும் விளம்பரங்கள் தந்து பேருதவி புரிந்துள்ளனர். இம்மலரை இருவாரங்களில் இரவு பகல் பாராது எழிலுற அச்சிட்டுத் தந்துள்ளனர், ஏஷியன் அச்சகத்தார்.

இவர்களுக்கும், விழா வெற்றி பெறப் பல வகையினும் உதவிவரும் பேரன்பர்களுக்கும், விழாவில் பங்கு கொண்டு சிறப்பிக்கும் அறிஞர்களுக்கும், விழாவிற்கு வருகைதந்து ஊக்குவிக்கும் அன்பர்களுக்கும் விழாக்குழுவின் சார்பில் மனங்கனிந்த நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறோம்.

நெற்குப்பை,<br>*1-5-77.*

— விழாக்குழுவினர்

கோவிலூர் ஆதீனம்

தொலைபேசி என்
காரைக்குடி 646

கோவிலூர் B.O.
மானகிரி வழி,
முகவை மாவட்டம்.
PIN. 623 307.

6—4—1977

# வாழ்த்து

இராமநாதபுர மாவட்டம் நெற்குப்பை மாநகரில் தனவைசிய பூபால குலதிலக தருமசிலரான திரு. ராம. சா. சாத்தப்பச் செட்டியார் அவர்களால் தன்னலமற்ற தூய தரும சிந்தனையுடன், சென்ற 1877ஆம் ஆண்டில் தொடங்கப்பெற்ற "ராம. சா. மடம்" என்ற அறநிலையம், ஆல் போல் பரந்து, பல்வேறு அறப்பணிகளுக்கும் ஆதரவாக நின்று, இந்நாள் நூற்றுண்டு விழாக் கொண்டாடப்பெறுவதும், அதன் நினைவாக மலர் ஒன்று வெளியிடவிருப்பதும் அறிந்து மிக மிக மகிழ்ச்சியடைகின்றோம். இந்த ஸ்தாபனம் சமயத்துறைப் பணிகள், விழாக்கள் ஆகியவைகளில் பெரும் பங்கு வகிப்பதோடல்லாது காலத்திற்கேற்ற கல்விப்பணியிலும் சிறப்பான பங்கு கொண்டுள்ளது பெரிதும் பாராட்டுதற்குரியது. பலவகையான பொருளாதார மாறுதல்களுக்கு இடையிலும் ராம. சா. மட தர்மகர்த்தர்கள் மேன்மேலும் சிறந்த முறையில் அறப்பணிகள் ஆற்றிவருவது மிகவும் போற்றத்தக்கதாகும். இந்த அறநிலையம் என்றென்றும் சிறப்பாக அறப்பணிகள் ஆற்றி, மேலும் பல நூறு நூற்றுண்டு விழாக்கள் கண்டு, புகழ் பெற்று விளங்க எல்லாம் வல்ல தேவி பராசக்தியின் திருவருள் நினைந்து வாழ்த்துகிறோம்.

வளர்க ராம. சா. மட அறப்பணிகள் !

வாழ்க அதன் அறங்காவலர்கள் !

ஓம் தத் ஸத்.

இராமநாத ஞான தேசிகர்
6-4-77.

## உள்ளுறை



# எங்கள் கணபதி

தும்பிக் கைபோல் சுழிபோட்டு
எங்கள் கணபதி - நாங்கள்
தொடங்கு கின்றோம் எச்செயலும்
எங்கள் கணபதி.
நம்பிக் கைகள் கூப்புகின்றோம்
எங்கள் கணபதி - நாங்கள்
நலங்க ளெல்லாம் பெறஅருள்வாய்
எங்கள் கணபதி.

கந்த ருக்கு முன்பிறந்த
எங்கள் கணபதி-நல்ல
கருத்தை நெஞ்சில் விதைத்திடுவாய்
எங்கள் கணபதி.
முந்தி முந்தி வந்துநிற்கும்
எங்கள் கணபதி - எங்கள்
முயற்சி ஓங்க அருள்புரிவாய்
எங்கள் கணபதி.

பரம சிவனார் பெரியமைந்தன்
எங்கள் கணபதி - அன்புப்
பார்வ தித்தாய் பிரியமைந்தன்
எங்கள் கணபதி.
அரச மரத்தின் அடியமர்ந்த
எங்கள் கணபதி - மக்கள்
அனைவ ருக்கும் எளியதெய்வம்
எங்கள் கணபதி.

— குழந்தைக்கவிஞர் அழ. வள்ளியப்பா



**1956-இல் சாத்தப்பா கழக உயர்நிலைப் பள்ளித் தொடக்க விழா**

தலைமை தாங்கிய பேராசிரியர் உயர்திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள்,
துவக்கிவைத்த இராமநாதபுர மாவட்டக் சழகத் தலைவராயிருந்த உயர்திரு. எஸ். இராமசாமி நாயுடு அவர்கள்,
உயர்திரு. L. இராமநாதன் செட்டியார் அவர்சள், ராம. சா. குடும்பத்தினர், நகரப் பெருமக்கள்.



பேராசிரியர் உயர்திரு. லெ. ப. கரு. இராமநாதன் செட்டியார் அவர்களும்
உயர்திரு. எஸ். இராமசாமி நாயுடு அவர்களும் பள்ளித் திறப்பு விழாவுக்கு அழைத்துச் செல்லப்படும் காட்சி—1956



1957-இல் சென்னைக் கல்வி இயக்குநராயிருந்த உயர்திரு. நெ. து. சுந்தரவடிவேலு அவர்களும் டிவிஷனல் கல்வி அதிகாரியாயிருந்த உயர்திரு. மகமத்கனி அவர்களும் சாத்தப்பா குடும்பத்தாருடன்.



சாத்தப்பா கழக உயர்நிலைப் பள்ளிக் கட்டடம்



மடத்தில் சுவாமி அலங்காரம்



சாத்தப்பா உயர்நிலைப் பள்ளிக்கு
நிலை வைக்கும் காட்சி

நெற்குப்பை நகர

# ஸ்ரீ சுப்பிரமணிய சுவாமி துதி

"பொற்கிழிக் கவிஞர்"
அரு. சோமசுந்தரன், M.A , B.T.,
காரைக்குடி.

ஓயாத நெற்குப்பை ஊருக்குள் வந்திங்கே
உபதேசம் செய்யும் முருகா!
நீயாக வந்தாயோ ? நிலைகொள்ள வந்தாயோ ?
நிகரில்லா சுப்ர மண்யா !
தாயாக வந்திங்கு சேயான எங்கட்குத்
தாராள மாக அருளிக்
காயாக இருந்தாலும் கனியாக நீமாற்றிக்
கடைத்தேற்ற வேண்டும் ஐயா ! (1)

மயிலேறி வந்தாயோ ? மலைவிட்டு வந்தாயோ ?
மனம்இங்கே வைத்த தாலே
குயிலான குறவள்ளி ஒயிலான தெய்வானை
கொண்டாட வந்த குமரா !
பயிரோங்க நெற்குப்பை நகரோங்கச் செல்வங்கள்
பாலிக்க வேண்டும் ஐயா !
வயிறார உணவோடு வளமோங்கி ஊர்வாழ
வழிசெய்து காப்பாய் ஐயா ! (2)

# பரியாமருதுபட்டி மருதீசர் துதி

"பொற்கிழிக் கவிஞர்"
அரு. சோமசுந்தரன், M.A.,B.T., காரைக்குடி.

அறங்காவல் உமையாளின் கரங்கொண்ட மருதீசர்

ஆனந்த சுயம்பு லிங்கம்

உறங்காத தேவாதி தேவர்கள் தொழுதேத்த

உலகாள வந்த தெய்வம்

இறங்காத மழையாடும் மரங்காணும் மருதத்தில்

எழுந்தருளி உள்ள ஈசன்

பரஞ்சோதி ஒருபாகம் அகலாத மருதீச!

பதம்தந்து அருள்புரி வையே!

வருடத்தில் ஒருநாளில் உதயத்தில் ஆதித்தன்

வளரொளியில் வாழும் ஈசன்

மருதத்தில் அரவாட நகரத்தில் உறவாட

மதியேந்தி வந்த தெய்வம்

உருவத்தில் சுயம்பாகி நெற்குப்பை ஓரத்தில்

உண்டாகி வந்த தெய்வம்

தருமத்தை உலகத்தில் நிலைநாட்டும் மருதீச!

தாயாகி அருள்புரி வையே!

# நமஸ்காரம்

ஸ்ரீ காஞ்சிப் பெரியவர்

பரமேஸ்வரன்மீது ஒரு சுலோகம் இருக்கிறது. அதில் பக்தர் இப்படிச் சொல்கிருர் :

“திரிபுர சம்ஹாரம் செய்த பிரபுவே! நீ என்னுடைய இரண்டு அபராதங்களை க்ஷமிக்க வேண்டும். அந்த இரண்டு அபராதங்கள் என்ன? போன ஜன்மத்தில் நான் உன்னை நமஸ்கரிக்காதது ஓர் அபராதம். வரப்போகிற ஜன்மத்தில் உன்னை நான் நமஸ்கரிக்காமல் இருக்கப் போகிறது இரண்டாவது அபராதம். போன ஜன்மத்தில் நான் உன்னை நமஸ்கரிக்கவில்லை என்று எப்படித் தெரிகிறது என்கிருயா? எனக்கு இப்போது ஒரு ஜன்மம் ஏற்பட்டிருப்பதிலிருந்தே அது தெரிகிறது. போன பிறவியில் உன்னை நமஸ்கரித்திருந்தால் அப்போதே எனக்கு மோக்ஷம் கிடைத்திருக்கும். இந்த மறு பிறவியே ஏற்பட்டிராது. அது சரி, அடுத்த ஜன்மாவில் நமஸ்கரிக்க மாட்டேன் என்றது ஏன் தெரியுமா? இந்த ஜன்மாவில் உன்னை நமஸ்கரித்துவிட்டேன் அல்லவா? அதனுல் நீ இனி எனக்குப் பிறவியே தர மாட்டாய். மறுஜன்மாவே இல்லாத போது அப்போது உனக்குச் செய்ய வேண்டிய நமஸ்காரம் மட்டும் எப்படி இருக்கும்? இப்படியாக, போன ஜன்மா, வருகிற ஜன்மா இரண்டிலும் உன்னை வணங்காத குற்றத்தை மன்னித்து விடு.”

இந்த சுலோகத்திலிருந்து என்ன ஏற்படுகிறது? மனப்பூர்வமாக ஈசுவரனை நமஸ்காரம் செய்துவிட்டால் போதும். அவர் நம்மை ஜனன மரண சக்கரத்திலிருந்து விடுவித்துவிடுவார். நம் பாவங்களையெல்லாம் போக்கி முக்தி தந்துவிடுவார். இந்த சுலோகத்தைச் சொன்னவர் காவிய சமத்காரத்தில் பாடியவரில்லை. அவர் பழுத்த அநுபவசாலி. எனவே, அவரது வார்த்தையைப் பரிபூரணமாக நம்பி நாமும் ஈசுவரனிடத்தில் சரணுகதி என்று விழுந்து நமஸ்காரம் பண்ணுவோம். நமஸ்கரித்தால் மோக்ஷம் நிச்சயம் என்ற நம்பிக்கையுடன் பண்ணினுல் அப்படியே கிடைக்கும். சந்தேகமில்லை.

நமஸ்காரம் செய்வதைத் ‘தன்னிடம் சமர்ப்பித்தல்’ என்பார்கள். தண்டம் என்ருல், ‘கழி அல்லது கோல்’ என்று அர்த்தம். கையில் பிடித்திருக்கிற ஒரு கோலை விட்டுவிட்டால் அது அப்படியே சடேரென்று விழுந்துவிடும். அப்படியே இந்தச் சரீரத்தை நமதல்ல, இது ஈசுவரனுடையது என்கிற எண்ணத்துடன் கீழே போடுவதுதான் நமஸ்காரம். நம் சரீரம் வெறும் மரக்கோல்தான். உதவாத பொருளை ‘அது தண்டமாகி விட்டது’ என்கிருேம். அப்படித் தண்டமான வஸ்துதான் நம் சரீரம். இதைத் தூக்கிப்

பிடித்து நிறுத்தி வைத்து ஆட்டுகிற சக்தி ஈசுவரன் கொடுத்ததே ஆகும். இந்த உடம்பை ஏதோ நாமே தாங்கி நடத்துகிறோம் என்ற எண்ணத்தை ஒழித்துவிட்டு, அதாவது, அகங்காரத்தை விலக்கிவிட்டு, இதற்கு அடையாளமாக, ஈசுவரன் முன் இந்தச் சரீரத்தைக் கீழே போட வேண்டும். அதுதான் தண்டம் சமர்ப்பிப்பது. ஜுரம் வந்தால் நம் சரீரத்தால் நிற்கவும் நடக்கவும் முடிகிறதில்லை. இந்த ஜன்மாவே பெரிய ஜுரமாகவந்திருக்கிறது. இதிலிருந்துநம்மைக் கடைத்தேற்றுவதற்காக, நமக்கு வந்திருக்கிற சமத்கார ஜுரத்தைப் புரிந்துகொண்டு, அதற்கு அடையாளமாக ஸ்வாமியின் முன் தண்டகாரமாக விழுந்து நமஸ்கரிக்க வேண்டும்.

'நாம் செய்கிறோம்' என்கிற எண்ணம் போய்விட்டால் அதுவே சதாகால நமஸ்காரம். அந்த அநுபவம் நமக்குச் சித்திக்காத போதிலும் ஈஸ்வர சந்நிதியிலாவது அப்படிப் பாவித்து வணங்கித் தரையோடு தரையாக எளிமையாகக் கிடக்க வேண்டும். இங்கே வணங்கிவிட்டால் அப்புறம் வெளியே எங்கேயும் வணங்காமல் இருக்கலாம். 'பொறுப்பை உன்னிடமே பூரணமாகப் போட்டேன்' என்பதற்கு அடையாளம், சரீரத்தைத் தரையில் போடுவது. கொஞ்சம் பொறுப்பை நமக்கு என்று வைத்துக் கொண்டால்கூட ஸ்வாமி தம் பங்கைக் குறைத்துக்கொண்டுவிடுவார். இதில் அரை குறைக்கு இடமே இல்லை. நம்முடைய நல்லது கெட்டது அவ்வளவும் அவர் விட்டபடி என்று சகல பொறுப்பையும் அவரிடம் தள்ளுவதற்கு வெளி அடையாளமாக உடம்பைத் தரையில் தள்ளி நமஸ்காரம் பண்ணவேண்டும். அப்படிச் செய்தால் நம் பாரம் அனைத்தையும் கிருபாசமுத்திரமான ஸ்வாமியே ஏற்று அநுக்கிரகிப்பார்.

---



---

## பாரதியாரின் வாழ்த்து

(காரைக்குடி ஹிந்து மதாபிமான சங்கத்தை வாழ்த்தி, **மகாகவி பாரதியார்** பாடிய பாடல்களி லிருந்து சில வரிகள்)

உத்தமராந் தனவணிகர் குலத்துதித்த
இளைஞர்பலர் ஊக்கம் மிக்கார்,
உண்மையே தாரகமென் றுணர்ந்திட்டார்.
அன்பொன்றே உறுதி யென்பார்,
வண்மையே குலதர்ம மெனக்கொண்டார்
தொண்டொன்றே வழியாக் கண்டார்;
ஒண்மையுயர் கடவுளிடத் தன்புடையார்.
அவ்வன்பின் ஊற்றத் தாலே
திண்மையுறும் ஹிந்துமத அபிமான
சங்கமொன்று சேர்த்திட் டாரே.

பல்நூல்கள் பதிப்பித்தும் பலபெரியோர்
பிரசங்கம் பண்ணு வித்தும்
நலமுடைய கலாசாலை புத்தகசா
லைபலவும் நாட்டி யும்தம்
குலமுயர, நகருயர, நாடுயர
உழைக்கின்றார், கோடி மேன்மை
நிலவுறஇச் சங்கத்தார் பல்லூழி
வாழ்ந்தொளிர்க, நிலத்தின் மீதே!

# சமயமும் சமுதாயமும்

தவத்திரு சுந்தரசுவாமிகள்,
கௌமார மடாலயம், கோயமுத்தூர்-6.

சமயம் என்ற சொல்லுக்கு ஒழுங்குபடுத்திய நெறி அல்லது பக்குவப்பட்டது என்று பொருள். தானியமாகவும் பருப்பாகவும் உள்ளதை உண்ணும் நிலையில் பக்குவப்படுத்தினால் சமையல் என்று சொல்வது போல, சமுதாய வாழ்வைப் பக்குவமான நெறியில் கொண்டு செலுத்துவது சமயம்.

உலகிலுள்ள மனிதர்கள் அனைவரும் துன்பத்தை வெறுத்து, இன்பத்தை அடைய விரும்புகின்றனர். அவ்வின்பமும் நீடித்து நிலைபெற்றிருக்க வேண்டும் என்பது அவர்களது விருப்பம். மக்கள் அனைவரும் தங்கள் தங்கள் வாழ்நாளில் சிறிது காலம் இன்பத்தையும் சிறிது காலம் துன்பத்தையும் மாறி மாறி அனுபவித்து வருவதைக் காண்கிறோம்.

உலகப் பொருள்கள் அனைத்தும் அழியுந் தன்மையுடையன. ஆதலால், அவை சிற்றின்பம் எனப்படும். என்றும் நிலைபெற்று நின்று இடையருது அனுபவிக்கத்தக்க இன்பம் பேரின்பம் எனப்படும்.

இப்பேரின்பத்தை மக்கள் அனுபவிக்கப் பெரியோர்கள் இறைவன் அருளோடு வகுத்த வழியே சமயமாகும்.

மனிதராகப் பிறந்தவர்கள் ஒழுங்கான நெறியோடு வாழ வேண்டுமானால், கடவுள் ஒருவர் உண்டென்று உணர்ந்து பணிந்து வாழவேண்டும். ''தெய்வம் ஒன்றுளதெனத் தேறிப் பணிவது மானிடப் பிறப்பில் வந்தோர் கடனே'' என்பார் தண்டபாணிசுவாமிகள். தேறுதல், சமய உணர்வு உண்டாதல், ஆன்மீகஞானம் உண்டாதல். பணிவது அதன் வழிநிற்றல். நல்வினை தீவினையின் பயனாகிய இன்பதுன்பம் இரண்டும் இன்றி வாழவேண்டுமானால் கடவுள் தன்மை உயிரின் தன்மை உணர்தலாகிய ஆன்ம ஞானம் பெற்று இறைவன் இணையடிகளை வாழ்த்தி வணங்க வேண்டும். ''இருள்சேர் இருவினையும் சேரா இறைவன் பொருள்சேர் புகழ்புரிந்தார் மாட்டு'' என்பார் திருவள்ளுவர்.

சமுதாயத்தில் சீர்கேடு வராமல் காப்பது சமயம். சமுதாயம் மனிதப் பண்பாட்டைக் காத்து வருவதற்கு சமயமே காரணமாகும். சமய நெறி இல்லாவிட்டால் சமுதாயம் கட்டுப்பாடு இல்லாததாகப் போய்விடும். மனமாற்றத்தை உண்டாக்குவது சமயம். அரசாங்கத்தாலே சமுதாயத்துக்குச் சீர்கேடு வந்தபோது சமய நெறியாளர்கள் தோன்றிச் சமுதாயத்தைச் சீர்படுத்தினர். அரசாங்கச் சட்டத்தாலே சமுதாயத்தை ஒழுங்குபடுத்த முடியாது. அந்தச் சட்டத்தை ஏமாற்றுவதற்கான வழிகளைச் சமுதாயம் தேடிக்கொண்டிருக்கும். அரசியல் சட்டப்படி ஒருவன் ஒரு குற்றம் செய்தால் அதற்குரிய சாட்சி, ஆதாரம் இருந்தால்தான், குற்றம் உறுதியாகிறது. சாட்சியில்லாவிட்டால், ஆதாரம் இல்லாவிட்டால் செய்த குற்றம், குற்றம் ஆவதில்லை. ஆதலால், குற்றம் செய்தவன் ஏமாற்றம் செய்ய முடிகிறது. குற்றம் செய்யத் தொடங்கும் போதே ஏமாற்றுகிற வழியையும் தேடுகிறான்.

குற்றம் செய்ய எண்ணுவதும் குற்றம் என்று சமயம் கூறுகிறது. "உள்ளத்தால் உள்ளலும் தீது" என்பார் திருவள்ளுவர். எனவே, சமயநெறி சமுதாயத்தை ஒழுங்குபடுத்தும் சத்திய மார்க்க மாகும்.

மனிதன் தனக்கும் சமுதாயத்துக்கும் பயனுள்ள வகையில் வாழ வேண்டும். அப்பொழுதுதான் அவனுடைய வாழ்க்கை முழுமை பெறுவதுடன் உலகமும் இடையருது இயங்கும். இதற்குத் தெய்வ உணர்வும், ஆன்மீக ஞானமும் இன்றி யமையாதவையாகும். சமய வாழ்க்கை இவற்றை அருளி மனிதனை ஈடேற்றுகிறது.

எதையும் பிடிவாதமாக வற்புறுத்தாமல் மனித சுபாவத்துக்கும், அறிவுக்கும் மதிப்பளிக்கும் பண்பாடு இந்து மதத்தின் அடிப்படையாகும். அவரவர் அனுபவ முதிர்ச்சிக்கு ஏற்றவகையில் ஆண்டவனை வழிபடச் சர்வ சுதந்திரம் உண்டு. இதனல் வழிபாடு, சடங்கு ஆகியவற்றில் பல வேறு பாடுகளும், சில முரண்பாடுகளுங்கூடக் காணப் படுகின்றன.

பல உருவங்களில் கடவுளை வழிபடுகிறவர் களும், ஒரு நாமம் ஒருருவம் ஒன்றுமிலாப் பரம்பொருளாக நெஞ்சக் கமலத்திருத்தி வழிபடுகிறவர்களும் இருக்கிருர்கள். ஆனல், எல்லாப் பிரிவுகளுக்கும் இடையே ஊடுருவி நிற்கும் ஒரு பொதுமை இருக்கிறது.

நமது இந்து சமயம் விஞ்ஞானத்துக்குப் பொருத்தமான கொள்கைகளையுடையது. விஞ்ஞானத்தால் உணர முடியாத உள்பொரு ளாகிய மெய்ப்பொருளை மெய்ஞ்ஞானத்தால் எடுத் தியம்பிச் சமுதாயத்தைத் தீய நெறியில் செல்ல ஒட்டாது நன்னெறியில் செலுத்துகிறது. இறைவன் இணையடியைச் "சேராதார் தீ நெறிக்கே சேர் கின்ருரே" என்பது அப்பர் அருள் வாக்கு.

இந்து சமயம் சமுதாயத்தோடியைந்து நன் னெறி செலுத்தும் சிறப்பாவன:

1. இந்து மதம் காலத்தால் மிகவும் முந்தியது. கல் தோன்றி மண் தோன்ருக் காலத்தே மக்கட் பண்பாட்டை உருவாக்கியது. ஒரு காலத்தில் இந்து மதம் உலகம் எங்கும் பரவி இருந்தது என்பதை நவீன புதைபொருள் ஆராய்ச்சி முதலியவற்ருல் அறியலாம்.

2. பிற மதங்கள் சொல்லும் சமுதாயத் தொண்டு நமது இந்து மதத்தில் அநாதியே இடம் பெற்றுள்ளது. உலகிலுள்ள எல்லா மதத்துக்கும் தாயகம் இந்து மதம்.

3. மற்றப் பிற்காலச் சமயங்கள் கூறுவன போல, இந்து சமயம் தன்னைச் சாராதவர்களைப் பாவிகள், அஞ்ஞானிகள் என்று கூறுவதில்லை. "யாதொரு தெய்வங் கொண்டீர் அத் தெய்வம் ஆகியாங்கே - மாதொரு பாகனுர்தாம் வருவர்" என்றும், "யாவர் எவ்வண்ணஞ் சொல்லும் எவற் றினும் இசைந்து நின்று மூவலற் ருெளிரும் தொல்சீர் முதற் பரம்பொருள்" என்றும் சமய சமரச எண்ணத்தைப் பேசுவது இந்து சமயம். எங்களுடைய சமயம் சார்ந்தவர்கள்தான் வீடு பேறடைவார்கள் என்று கூறுவதில்லை, மற்றவர் பாவிகள் என்பதில்லை.

4. இந்து சமயம் வெறும் நம்பிக்கையோடு நின்றுவிடாமல், ஒவ்வொரு கொள்கையையும் ஆராய்ந்து, ஐயங்களை அகற்றிச் சமுதாயத்துக்கு அறிவினைப் புகட்டுவது.

5. சமுதாயத்தை அதிகமாகக் கட்டுப் படுத்தாது, இல்லறத்தாரும், துறவறத்தாரும் வீடு பேறடையலாம் எனக் கூறுவது.

6. உலக வாழ்க்கையில் எல்லாச் செயலிலும் இந்து சமயம் இணைந்து சமுதாயமானது தீய நெறி யில் செல்லாமல் நன்னெறி நடக்கச் செய்கிறது.

7. மக்கள் செய்த நல்வினை, தீவினைக்குத் தக்கவாறு மறு பிறப்பு உண்டு என்பதை வலி யுறுத்திச் சமுதாயத்தை நல்ல நெறியிலே செலுத்துகிறது.

8. வீட்டிலும், கோவிலிலும், எல்லாவிடங் களிலும் கடவுளை வைத்து வழிபட்டுக் கடவுள் நாம் செய்யும் நன்மையைத் தீமையை எங்கும் இருந்து உணருகிருர் என்பதைச் சமுதாயத்துக் குணர்த்திச் சமுதாயத்தைப் பாதுகாக்கிறது.

9. "ஒன்றே பேரூர் வழியதற்கு ஆறுள" என்று கூறிப் பரம்பொருள் அவ்வவர் பக்குவத்திற் கேற்ப உருக்கொண்டு நெறிப்படுத்தி என்றும் நீக்கமற உள்ள பேரின்பச் சமுதாயம் அடையச் செய்வது.

சமயம் அன்பை வலியுறுத்திச் சொல்லும். சமுதாயத்தில் அன்பில்லாதவர்கள் சமய நெறி யைப் பற்றி நின்றவராக முடியாது. "அன்பும் சிவமும் இரண்டென்பர் அறிவிலார், அன்பே

சிவமாவதாரும் அறிகிலார், அன்பே சிவ மாவதாரும் அறிந்தபின், அன்பே சிவமா யறிந்திருப்பாரே'' என்பார் திருமூலர். அன்பின் இணைப்பால் சமுதாயத்தை இணைத்துச் செல்வது, சமயம். சமுதாய அன்பின் முதிர்ச்சி, சமயம். ''சமய நெறி தொட்டு நின்று சாதித்து உண்மைத் தவம்புரிந்து தன்னறிவே சாட்சியாக'' என்பார் தண்டபாணி சுவாமிகள். சமய நெறியள வில் நிற்பவர்கள், சமய நெறி தொட்டு நிற்பவர் கள், சமயநெறி தொட்டு நின்று சாதித்தவர்கள், தவம் புரிந்தவர்கள் என்பது படிமுறையாகும்.

சமயத்தை விட்ட சமுதாயம் பண்பாடுடைய தாகாது. சமுதாயமும் சமயமும் இணைந்திருந் தால் பயனுடையதாக இருக்கும்.



# முருகன்

அருள்மொழி அரசு கிருபானந்த வாரியார்.

வழிபட்டோர்க்கு எளிதில் கருணை புரியுந் தெய்வம் முருகன் எனவுணர்க.

'ஸ்கந்தஸ்ய கீர்த்திம் அதுலாம் கலிகல்மஷ
நாசினீம்!'

என்ற திருவாக்கு இதனை வலியுறுத்தும். 'கலியில் விளையும் வன்மையான பாவங்களைப் போக்க வல்லது முருகவேளின் புகழ் ஒன்றேயாம்' என்பது இதன் பொருள்.

குழந்தைகள், தம்பால் உள்ள விலையுயர்ந்த பொருள்களைச் சிந்திக்காமலும், கேட்போனுடைய நிலையை எண்ணாமலும் தரும் இயல்பு உடையன.

என்றும் அகலாத இளமையுடைய முருகன், தன்னை விரும்பி வழிபடும் அடியார்களின் துன்பங்களை நீக்கி, இன்பங்களையருள வல்லான்.

ஓம் என்ற பிரணவம் அ, உ, ம என்ற மூன்று அங்கங்களையுடையது.

அ—சிருஷ்டிக்கின்றது.
உ—ரக்ஷிக்கின்றது.
ம—ஒடுக்குகின்றது.

இந்த மூன்றில் ரக்ஷிக்கின்ற எழுத்தாகிய உகரமே சிறந்தது. நாம் இறைவனிடம் "ஈசனே! என்னை சிருஷ்டி செய்," என்று கேட்கின்றோமா? "ஈசனே! என்னை சம்மாரம் செய்" என்று கேட்கின்றோம்? இல்லை, "என்னை ரட்சிக்க வேண்டும்" என்றுதானே வேண்டுகின்றோம். 'பாஹிமாம்' என்பர் வடமொழியில்.

எனவே, உகரம் ரக்ஷக எழுத்து என உணர்க. அதனால்தான் உலகங்களையும் திருத்தொண்டர்களையும் ரக்ஷிக்கின்ற நூலாகிய பெரிய புராணம் 'உலகெலாம்' என்று தொடங்குகின்றது.

கம்ப நாடரும் 'உலகம் யாவையும்' என்று தொடங்குகின்றார். நக்கீரரும் 'உலகம் உவப்ப' என்று ஆரம்பிக்கின்றார். இதனால் உகரம் எத்துணை முக்கியமுடையது என்பது நன்கு புலனாகின்றது.

ஆன்மாக்களுக்கு மூன்று நிலைகளுண்டு. கேவலம், பெத்தம், முத்தம் என்பன.

இருளும் அறியாமையும் துன்பமும் சேர்ந்த நிலையில் ஆன்மாக்கள் கிடந்தன. அது கேவல திசை.

இருளும் ஒளியும், துன்பமும் இன்பமும், அறிவும் அறியாமையும் விரவிய நிலையில் வாழ்கின்ற நிலை, பெத்த திசை.

இன்பமே, அறிவே, ஒளியேயாய் நின்ற நிலையில் ஆன்மா இன்புறும் நிலை, முத்த திசையாகும்.

எனவே, ஆன்மாக்களுக்கு மூன்று நிலைகள் எனவுணர்க.

முருகு—என்பது பகுதி.
அன்—ஆண்பால் ஒருமை விகுதி.

முருகு என்ற சொல்லில் ம்+உ, ர்+உ, க்+உ என்று மூன்று உகரங்கள் வருவதையுணர்க.

கேவல திசையிலும், பெத்ததிசையிலும் முத்த திசையிலும் காக்குங்கடவுள் முருகன் என்பது இதனால் போதரும்.

முருகன் என்ற சொல் சிறப்புடையது. இது வழிவழி வந்த மகாவாக்கியமாகும்.

# நன்றிக்கு இலக்கணம்

அருட்பா அரசு கிரிதாரி பிரசாத்

கர்ணன் நன்றி மறக்காதவன். கர்ணனைக் ''கட்சி மாறிவிடு. நீ பாண்டவர் பக்கம் வந்துவிடு. குந்தவிதான் உன் அம்மா, தம்பியர் ஐவர், பாண் டவர். நீ சூரியகுல மன்னன். நான் சொல் வதைக் கேள்'' என்று ஆசை காட்டிய போதும், கொஞ்சமும் மாருமல், ''நான் கௌரவர் பக்கம் இருந்து போரிட்டு மடிவேன்'' என்று சொன்ன வன் கர்ணன்.

கர்ணன் பிறவிக் கொடை வள்ளல். இப்போது பணம் படைத்தவர் பலர் கொடுக்கப் பிரியப்படுவ தில்லை. தொகையை எழுதிவிட்டு ஏமாற்றுவோர் பலர்.

சின்ன வயதிலேயே கர்ணன் கையேந்திய ரிஷிகட்கு நவரத்தின மாலையைக் கொடுத்தான். அவர்கள் கர்ணனை, ''நீயே உலக வள்ளல், உன்னைப் போலப் பிறக்க இனி யாருமில்லை'' என்று பாராட்டினர்.

கர்ணன் எண்ணெய் தேய்த்துக் குளிக்கப் போனுன். அந்த நேரம் பார்த்துப் பிச்சை கேட்க ஒருவன் வந்தான். உடனே, இடக்கையால் தங்கக் கிண்ணத்தை எடுத்துக் கொடுத்தான். ஏன் தெரியுமா? நல்ல காரியத்தை உடனே செய்ய வேண்டும். காலம் கடத்தினுல் புத்தி மாறிவிடும். எனவே, எந்தக் கை என்றும் பாராமல் உடனே கிண்ணத்தை எடுத்துக் கொடுத்துவிட்டான்.

பாரதத்தில் பல வேலைகட்குக் கர்ணன் சூத்ர தாரி. சகுனியைவிடச் சூழ்ச்சிகளை அதிகமாகச் செய்தவன் அவனே. குருவேகூட, ''என்னிடம் கற்ற வித்தை உனக்குக் கை வராது'' என்ற போதும் சுத்த வீரனுக வாழ்ந்தவன் அவனே. அஸ்தினுபுரத்து ராஜ சபையில், பாண்டவர்-கௌரவர்கட்கு மத்தியில், ''வில்லேந்தி வீரங் காட்டத் துணிந்த நீ யார்? உன் பெற்ரோர் யார்? ராஜகுமாரரே இங்கே வில்லேந்திட முடியும்'' என்ற கிருபாச்சார் கேள்விகட்குப் பதில் கூற முடியாமல் நின்ற கர்ணனை, ''அண்ணு!'' என்று துரியோதனன் அணைத்தான். பிறகு சபையில் இடிமுழக்கம் செய்தான்.

''தம்பிகாள்! அரச கிரீடத்தைக் கொண்டுவந்து சூட்டுங்கள். இவனே நம் அண்ணன். அஞ்ச நாட்டு மன்னன். மண்டல பொக்கிஷம் இவனையே சேரும். நம் தளபதியும் இவனே'' என்ருன் துரியோதனன்.

இதைக் கேட்ட கர்ணன், தாய் இல்லையே என்ற குறை நீங்கப் பெற்ருன். துணையில்லையே, பொருள் காணேமே, ஆட்சி வருமா என்ற ஏக்கங்கள் கர்ணனை விட்டுப் போயின.

இதைக் கடைசிவரை கர்ணன் மறக்கவில்லை. கண்ணன் ஆசைமொழி காட்டிய போதும், பெற்ற தாயான குந்தவியே கண்ணீர் வடித்து உருகி வேண்டிய போதும், நன்றி மறக்காமல் போரிட்டு மடிந்தான்.

நட்பா, உறவா என்ற கேள்வி கண்ணனுல் கர்ணனிடம் எழுப்பப்பட்டபோது தாய், சகோதரர்கள் உறவைவிடத் துரியோதனனின் நட்பையே உயிரினும் பெரியதாக மதித்து, நன்றி மறக்காமல் நட்பே பெரியது என்று தீர்மானமாக வாழ்ந்து காட்டினுன் கர்ணன்.

''என் நாள்கள் எண்ணப்படுகின்றன. நான் சத்திய வழி போகவே விரும்புகிறேன்.

உத்தமன் என்ற பேரெடுக்க ஆசைப்படுகிறேன். சண்டாளத்தனம் செய்யப்போவதில்லை. என் பாவத்துக்கு நானே பொறுப்பு. நான் நீண்ட காலம் வாழப்போவதில்லை. சாகத் துணிந்து விட்டேன்'' என்றான் கர்ணன்.

கண்ணன் குந்தி தேவியிடம் போனான். "அத்தை, உன் மகன் கர்ணன். அவன் நீ கன்னிப்பருவத்தில் பெற்றெடுத்துக் கைவிட்டு விட்ட பிள்ளை. அவன்தான் உன் மகன்களைக் கொல்லப்போகிறான். அண்ணனே தம்பியரைச் சாகடிப்பதா! நீ போய் உண்மை பேசு. தாய்ப் பாசம் சகோதர வாஞ்சையைக் காட்டி நம் கட்சிக்கு இழு'' என்றான்.

அவ்வாறே சென்ற குந்தி தேவி, பால் சுரக்க நின்றாள். கர்ணன் பெற்ற தாயைக் கண்டு பரவச மடைந்தான். ஆனாலும், கட்சி மாற முடியாது என்று உறுதியாகச் சொல்லிவிட்டான்.

துரியோதனன் கர்ணனை உண்மையான நண்பனாகக் கருதினான். ஒரு சமயம், கர்ணனும் துரியோதனின் மனைவியும் சொக்கட்டான் ஆடிக் கொண்டிருந்தார்கள். கணவன் வருவதை அறிந்து அவள் எழுந்தாள். அப்போது கர்ணன் அவள் ஆடையைப் பற்றி இழுத்தான். மணிகள் சிதறின. துரியோதனன் கொஞ்சமும் சந்தேகப் படாமல், "உட்காருங்கள், ஆட்டம் தொடரட்டும்'' என்றான். "சிந்திய மணிகளைப் பொறுக்கவோ கோக்கவோ?'' என்றான். "அப்பேர்ப்பட்ட நண்பனை எதிர்க்கவே மாட்டேன். அவனுக்காகப் போரிடுவேன்'' என்றான் கர்ணன். குந்தவி தோல்வியோடு திரும்பினாள்.

பாரதப் போர் நடந்தது. பதினேழாம் நாள் கர்ணன் செய்த தர்மம், அர்ஜுனன் விட்ட அம்புகளைத் திரும்பத்திரும்ப அவனிடமே போக வைத்தது. கண்ணன் வயோதிக பிராம்மணர் வேடம் பூண்டு, அடிபட்டு நிர்க்கதியாகக் கிடக்கும் கர்ணனிடம் யாசகம் கேட்கப் போனான். கர்ணன் கவச குண்டலங்களைக் கழற்றித் தனது உடம்பில் தைத்துள்ள அம்பைப் பிடுங்கி, பீறிட்டு ஓடும் ரத்தத்தால் தருமத்தைத் தாரை வார்த்துக் கொடுத்தான். பிறகு, குந்தவி வந்தாள். சாகக் கிடக்கும் கர்ணனை மடிமீது கிடத்தினாள். பாண்டவரிடம் கர்ணனே அவர்கட்கு அண்ணன் என்று சொன்னாள். "இதை முன்பே சொல்லி இருந்தால் சண்டையே போட்டிருக்க மாட்டோம்'' என்று வருந்தினர். தருமன் சொன்னான். "இனிப் பெண்களிடம் எந்த ரகசியம் சொன்னாலும் உடனே வெளியாகக் கடவது. நீ உனக்குத் தெரிந்த உண்மைகளை முன்பே சொல்லியிருந்தால் இந்தப் போர்க்களமே இல்லை'' என்றான்.

தம்பிகள், "அண்ணா, அண்ணா!'' என்று கதறினார்கள். தாய், "மகனே, மகனே'' என்று கதறினாள். "நீ சூத்திரன். எனவே, உன் முகத்தில் விழிக்க மாட்டேன், போருக்குப் போகும் போது உனக்குத் திலகம் இடமாட்டேன்'' என்று கூறிய மனைவி ஓடோடியும் வந்தாள். மனைவி உச்சிமோந்து முத்தமிட்டாள். துரியோதனனோ, "நன்றிக்கு இலக்கணமான, கர்ணா!'' என்று அழுதபடி நின்றான். அந்த நேரம் கண்ணன் தோன்றி, "உனக்கு என்ன வரம் வேண்டும்?'' என்றான். "இல்லையென்று சொல்லாத கொடை உள்ளத்தை எனக்குக் கொடு'' என்றான் கர்ணன். வானவர் வரவேற்க, போர்க்களத்தில் மனைவி, தாய், சகோதரர்கள், கௌரவர்கள் தேம்பித் தேம்பி நிற்க, சொர்க்கம் புகுந்தான் கர்ணன்.

நாம் கர்ணனைப் போல நன்றியுடன் வாழ வேண்டும். கண்ணன் மாதிரி தர்ம யோகம் பயில வேண்டும்.

# தெய்வக் களிறு

வாகீச கலாநிதி கி. வா. ஜகந்நாதன்

ஒரு காட்டில் மதம் பிடித்த யானைகள் இருந்தன. கடும் புலிகள் வாழ்ந்தன. நஞ்சைக் கக்கும் பாம்புகள் ஓடின. நரிகளும் ஓநாய்களும் திரிந்தன. மரத்தின்மேல் குரங்குகள் பாய்ந்தன. கரடிகளுக்கும் குறை வில்லை. மரங்களும் சிறு சிறு குன்றுகளும் அடர்ந்து செறிந்திருந்தமையால் அந்தக் காட்டுக்குள் வழி கண்டுபிடித்துப் போவது மிகவும் அரிதாயிருந்தது. வழி எது என்று ஒன்று இருந்தால்தானே, கண்டுபிடிப்பதற்கு? மனிதனுடைய காலே படாத கன்னிக்காடு அது. உள்ளே கதிரவன் கதிர் புக இய லாது. அத்தனைச் செறிவு பகலிலும் இரவி லும். ஒரே இருள் மண்டிக் கிடந்தது. புறத்தே செங்கதிரோன் கதிர் எங்கும் பரவி ஒளிவிடும். ஆனால், அந்தக் காட்டினிடையே அப்போதும் இருளே தேங்கி நிற்கும்.

ஒளி புகும்காடானால் இரவிலேதான் விலங்கு கள் விளையாடும். ஆனால், இந்தக் காட்டிலோ அறுபது நாழிகையும் இரவுதான். ஆகை யால், விலங்குகளின் கோரத் தாண்டவத்தை எப்போதுமே அங்கே காணலாம்.

இத்தகைய காடு எங்கே இருக்கிறது? ஒவ்வொருவரிடமும் இருக்கிறது. நெஞ்சம் என்னும் இருளடர்ந்த காட்டில் ஆசை, ஆணவம், பொறாமை, கோபம், பகை, லோபம், பிறருக்குத் தீங்கு எண்ணும் நினைவு முதலிய பல விலங்குகள் திரிகின்றன. அறி யாமை என்னும் இருள் மண்டிக் கிடக்கிறது. ஆங்காரம் என்னும் மத யானையின் அட்ட காசம் சொல்லி முடியாது.

வேடர்கள் வன விலங்குகளைப் பிடிக்க வேண்டுமானால் கையில் தீப்பந்தங்களைக் கொண்டுசெல்வார்கள். வெளிச்சத்தைக் கண் டால் அவை அஞ்சும். ஒளிக்கும் வன விலங்கு களுக்கும் பகை. இருளுக்கும் காட்டுவிலங்கு களுக்கும் நட்பு. இருள் நிரம்பிய காட்டு ராஜ் யத்தில் ஒளி பரவினால் விலங்குகளின் ஆரவாரம் அழியும், காடு சோலையாகிவிடும். அதற்கு வழி உண்டா?

கரிய உடம்பு படைத்த மதயானை காரிருள் செறிந்த காட்டிலே பிளிறுகிறது. மதயானை கள் பல வளரும் காடாகிய மனம், இருள் செறிந்திருக்கிறது. இது காடாக இருப்பது கண்டு மக்கள் அஞ்சுவார்கள். ஆனால், யானை அஞ்சுமா? ஒரு களிறு இந்தக் காட்டுக்குள்ளே புகுந்தது. முன்பே பல களிறுகள் வாழும் காட்டில் பின்னும் ஒன்று புகுந்தால் அந்தக் காட்டில் கடுமை மிகுமே ஒழியக் குறையாது என்று தோன்றுகிறது அல்லவா? இந்தக் களிறு அத்தகையது அன்று. தன் காற்பட்டதையும் கைபட்டதை யும் நசுக்கித் துன்புறுத்தி அழிப்பது காட்டு யானை. இந்த யானையோ தன் காற்பட்ட

தைக் கையால் எடுத்துத் துன்பம் போக்கி இன்பம் தருவது. இந்தக் களிற்றின் திருக் கோலம் அழகியது.

காட்டுக்களிற்றுக்குத் தும்பிக்கை என்ற ஓர் உறுப்பு இருக்கிறது. அதைக்கை என்று சொல்லுகிறோம். கை என்றால் கொடுக்க வேண்டும். தும்பிக்கையால் யானை வாங்கிக் கொள்கிறதே ஒழியக் கொடுக்கிறது இல்லை. இந்தக் களிறோ ஐந்து கைகளை உடையது. தன்னைச் சேர்ந்தவர்களுக்கு வேண்டிய பொருள்களையெல்லாம் வழங்குவதற்கு அமைந்த திருக்கரங்கள் அவை. நான்கு கரங்கள் நம் கைகளைப் போன்றவை. ஒன்று, தும்பிக்கை; முகத்திலிருந்து நீண்ட துதிக்கை.

இந்தத் தெய்வக் களிறு, மற்றத் தேவர் களெல்லாம் நான்கு கரங்கள் படைத்திருக்க, தான் மாத்திரம் தனியே துதிக்கை ஒன்றை யும் படைத்திருக்கிறது. இந்தக் களிறு அன்பர்கள் மனமாகிய காட்டிலே வந்து விளை யாடத் திருவுள்ளம் கொள்கிறது. பாழும் "ஆங்காரமென்னும் மதயானை உலாவும் காடாயிற்றே!" என்று நாம் பயப்படு கிறோம். ஆனால், இந்த யானை பயப்படுமா? 'நமக்கு ஏற்ற இடம் காடுதானே? தேவ லோகத்தில் உள்ள கற்பகக் காட்டில் உலாவ லாம். ஆனால், அது நமக்கு வேண்டாம். பூவுலகத்தில் பல ஆரணியங்கள் உண்டு. அவற்றினும் நம்முடைய நாட்டம் செல்ல வில்லை. கற்பகக் காட்டில் தேவர்கள் சுகமாக வாழ்கிறார்கள். அங்கே நமக்கு வேலை இல்லை. பூவுலகக் காட்டில் வேடர்களும் மற்றவர்களும் புகுந்து வன விலங்குகளை அழிக்கிறார்கள். அங்கும் நமக்கு வேலை இல்லை. வேறு யாரும் புகுவதற்கு அஞ்சும் நம்முடைய அன்பர்களின் உள்ளமாகிய காடு தான் நமக்கு ஏற்ற இடம். அங்கே நாம் போனால் அங்குள்ள விலங்குகள் யாவும் இருக்கும் இடம் தெரியாமல் ஓடிவிடும்' என்ற அருளுள்ளத்தோடு இந்தக் களிறு வருகிறது.

அன்பருடைய நெஞ்சமாகிய காட்டில் இப் போது தன் தோள்கள் நான்கோடு கை ஒன்றும் மிகுதியாகக்கொண்ட விநாயகக் களிறு விளையாடுகிறது, வளர்கிறது. என்ன ஆச்சரியம்! இப்போது நெஞ்சம் காடாகவே இருக்கிறது. பெரிய காடென்றே சொல்ல வேண்டும். ஆனால், இந்தக் காட்டில் வேறு விலங்குகள் இல்லையே! பசிய இலையும், நறு மணம் வீசும் மலர்களும், இனிய கனிகளும் எங்கு நோக்கினும் கண்களுக்குத் தென்படு கின்றன. இங்கேதான் இப்போது இருளே இல்லையே! இருள் செறிந்த காடா இது? ஒளிவளர் செறிந்த காடா இது? ஒளிவளர் காடாகிவிட்டது. அதனால் மரமும் இலையும் மலரும் கனியும் தெளிவாகத் தெரிகின்றன.

இந்த நெஞ்சம், முன்பு காடாகவே இருந் தது. ஒரு கையை மாத்திரம் உடைய யானை கள் வளரும் காடாக, இருள் வளரும் காடாக இருந்தது. இப்போதோ தன் தோள் நான் கோடும் ஒரு கையையுங் கூடப் பெற்ற கணபதிக் களிறு வளர்கிற காடு. எத்தகைய மாற்றம்!

> தன்தோள் நான்கின்
> ஒன்றுகைம் மிகூஉம்
> களிறுவளர் பெருங்காடு
> ஆயினும்
> ஒளிபெரிது சிறந்தன்று
> அளியஎன் நெஞ்சே!

(தன்னுடைய திருத்தோள்கள் நான்கி னோடு ஒரு கையை மிகுதியாகப் பெற்ற களிறு வளர்கின்ற பெரிய காடானாலும், ஒளி மிகுதியாகச் சிறந்து விளங்குவது, இரங்கு தற்குரிய என் நெஞ்சு.

இதற்கு முன் இரங்கும் நிலையில் இருந்ததை நினைந்து, 'அளிய நெஞ்சு' என்றார். அளிய—இரங்கத்தக்க.)

தமிழ் நூல்களில் பழமையாகக் காணப் படும் துதிகளுள் விநாயகரைப் பற்றிய செய்யுள்கள் மிகவும் குறைவு. ஆயினும், கபிலதேவ நாயனார், பரணதேவ நாயனார், நம்பி ஆண்டார் நம்பி முதலிய புலவர்கள் பாடிய சில பிரபந்தங்கள் பதினோராந் திரு முறையில் உள்ளன. சில பாடல்கள் கர்ண பரம்பரையாக வருகின்றன. அவற்றின் நடையைப் பார்த்தாலே அவை பழைய பாடல்கள் என்று தெரிய வரும். பழங்காலந் தொட்டு வழங்கி வரும் பாடல்களில் இதுவும் ஒன்று. இதனை இயற்றிய புலவர் இன்னா ரென்று தெரியவில்லை.

# இந்து மதத்தின் சாரம்

கவியரசு கண்ணதாசன்

இந்து மதம் பிற மதங்களை வெறுப்பதில்லை. சொல்லப்போனால் எல்லா மதங்களையும் தன்னோடு சமமாகவே கருதுகிறது.

மதத் துவேஷம் எந்தக் காலத்திலும் இந்துக்களால் ஆரம்பிக்கப்பட்டதில்லை.

அதன் பரந்த கரங்கள் அத்தனை மதங்களையும் அணைத்துக்கொண்டே வளர்ந்திருக்கின்றன.

ஓர் ஏரியின் நீரைப்போல் பரம்பொருளையும், அதில் இறங்குகின்ற பல படித்துறைகளைப் போல் எல்லா மதங்களையும் பரமஹம்சர் காணுகின்றார்.

அன்பின் மூலம் அன்பு வளர்வதைப் போல், வெறுப்பின் மூலம் வளர்வதில்லை என்கிறது இந்து மதம்.

வெறுப்பு ஒரு குறுகிய கூட்டுக்குள் சதிராடுகிறது.

அன்போ, வானையும் கடலையும் போல் அறிவை விரியச் செய்கிறது.

நிலத்தைப் பங்கு போட்டுக்கொள்வது போல் வானத்தைப் பங்கு போட முடிவதில்லை.

'நிலம் என்பது மதம், வானம் என்பது பரம்பொருள்' என்கிறார் பரமஹம்சர்.

சமண மதம் பரவிக் கிடந்த காலத்தில் அதைக் கருவறுத்து, சமணர்களைக் கழுவில் ஏற்றிய கூன் பாண்டியனும், மங்கையர்க்கரசியுந்தான் பிற மதங்களைத் துவேஷித்த முதலாவதும் கடைசியுமான இந்துக்கள்.

அவர்களுக்கு முன்னாலும் சரி, பின்னாலும் சரி, இந்து மதம் யாரையும் வெறுத்ததில்லை.

"வீட்டின் உச்சி முகட்டுக்குப் போக ஏணி, மூங்கில் படி, கயிறு - இவற்றில் ஏதேனும் ஒன்றன் உதவியைக்கொண்டு ஏறலாம். அது போலப் பரம்பொருளை அடைவதற்கு வேறு வேறு மார்க்கங்கள் உண்டு. உலகத்திலுள்ள ஒவ்வொரு மதமும் அப்படிப்பட்ட மார்க்கங்களில் ஒன்றைத்தான் காட்டுகிறது.

மின்சார விளக்கின் ஒளி மங்கலாகவோ, பிரகாசமாகவோ வெவ்வேறு இடங்களில் வெவ்வேறு விதமாகத் தோன்றுமாயினும், மின்சாரம் ஒரே இடத்திலிருந்துதான் வருகிறது.

அது போலவே, வெவ்வேறு காலத்தில் தேசந்தோறும் தோன்றிய மத போதகர்கள் அனைவரும், "சர்வ சக்தியுள்ள ஓரேயொரு மூலப்பொருளிடமிருந்து இடைவிடாது பெருகிக்கொண்டிருக்கும் ஒளியை வெளியிடும் தீப ஸ்தம்பம் போன்றவர்களே" என்கிறார் பரமஹம்சர்.

எல்லா மதங்களாலும் போற்றப்படும் இறைவன் ஒருவனாகவே இருந்தால், ஏன் அவனைப் பல மதங்களும் பல மாதிரி வருணிக்கின்றன.

இதற்கு பரமஹம்சரின் பதில் :

"நீ வீட்டுக்கு எஜமானன், உன் மனைவிக்குக் கணவன், மகனுக்குத் தந்தை, வேலைக்

காரனுக்கு முதலாளி. ஆனாலும், நீ ஒருவன் தான்.''

"அவரவரும் உன்னிடம் கொண்ட உறவு முறையைவைத்து உன்னைப் பார்ப்பது போல, பல மதத்தவரும் ஆண்டவனைப் பல விதத்தில் பார்க்கிறார்கள்.''

ராமகிருஷ்ணரின் இந்த வாக்கு இந்துவின் விரிந்த ஞானத்துக்கு எடுத்துக் காட்டு.

இந்து மதத்திற்கு எதிராகப் பல கட்டங்களில் தோன்றிய நாத்திக வாதம் தானாகவே மடிந்து போனதற்குக் காரணம் இதுதான்.

சகிப்புத் தன்மையையும், அரவணைப்பையும் இந்து மதம் வலியுறுத்துகிறது.

'உடலில் பட்ட காயம் மறைந்துவிடும், உள்ளத்தில் பட்டால் மறையாது; ஆகவே, பிறரை நீ புண்படுத்தாதே' என்கிறது இந்து மதம்.

தண்டனையைக் கடவுளின் பொறுப்பில் விட்டுவிடுவதால், நடைமுறைகளைத் தாங்கிக் கொள்கிற சக்தி இயற்கையாகவே வந்து விடுகிறது.

"காலப்போக்கில் ஒவ்வொன்றும் மாறு கிறது'' என்ற விஞ்ஞான உண்மையை வேதாந்த உண்மையாக இந்துக்கள் எப்போதோ சொல்லிவிட்டார்கள்.

'மாறும் வரை பொறுத்திரு' என்பதே இந்து மதத்தின் உபதேசம்.

மனப்பக்குவம் இல்லாதவன் நினைத்தபடி எல்லாம் நடக்கிறான்.

வழியில் கிடைக்கும் அனுபவங்கள் அவனுக்கு அந்தப் பக்குவத்தை உண்டாக்கி விடுகின்றன.

'பொறுப்பை வளர்ப்பவனும் என்றோ ஒரு நாள் பக்குவம் பெறுவான். அதுவரை அவனை நாம் சகிப்போம்' என்பதே இந்து மதத்தின் சாரம்.

நான் ஓர் இந்து என்ற முறையில், எனது மதத்தின் மேன்மைகளை நான் குறிப்பிடு கிறேன். அவை பிற மதங்களிலும் இருக்க லாம். நான் மறுக்கவில்லை.

---



---

# இந்து மதமே இந்துக்களுக்குக் கதி

தத்துவமேதை தமிழ்வாணன்

ஒரு நாட்டின் பெருமை, அதனுடைய இராணுவ வலிமையினுல் மதிப்பிடப்படுவது அல்ல. அதனுடைய தொழில் வளத்தினுலும் மதிப்பிடப்படுவது அல்ல. அதனுடைய செல்வச் செருக்கினுல் மதிப்பிடப்படுவதும் அல்ல.

ஏனென்ருல்,

இராணுவ வலிமை, தொழில் வளம், செல்வச் செருக்கு ஆகிய இவை எல்லாம் நிலையானவை அல்ல !

இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பு ஜெர்மனிதான் உலகிலேயே மிகப் பெரிய வல்லரசாக விளங்கிக்கொண்டிருந்தது. ஆனுல், அந்தப் பெருமை இன்று அதற்கு நிலைத்து நிற்கவில்லையே !

ஐம்பது ஆண்டுகளுக்கு முன்பு பிரிட்டிஷ் பேரரசுதான் உலகிலேயே மிகப் பெரிய செல்வச் செருக்கோடு விளங்கிக்கொண்டிருந்தது. ஆனுல், அந்தப் பெருமை இன்று அதற்கு நிலைத்து நிற்கவில்லையே !

இராணுவ வலிமை, தொழில் வளம், செல்வச் செருக்கு ஆகிய இவையெல்லாம் ஒரு நாட்டிற்கு இன்றியமையாதவையே. நான் இதை மறுக்கவில்லை.

ஆனுல், இவை அனைத்தும் நிலையற்ற சங்கதிகளாய் இருப்பதால் இவற்றின் அடிப்படையில் உருவான பெருமைகளும் நிலையற்றனவாகிவிடுகின்றன என்றே நான் சொல்லுகிறேன்.

இதை மறுக்க முடியுமா ?

ஒரு நாட்டின் நிலையான பெருமை, அந்த நாட்டு மக்களின் பண்பாடு, நாகரிகம், கலாச்சாரம்-இவற்றைக்கொண்டே மதிப்பிடப் படுகிறது. இது மெய், உறுதி.

இப்படி மதிப்பிடப்படுவதுதான் நம்முடைய பாரத நாட்டின் பண்டைய மரபு.

நமது இராமாயணத்தையே எடுத்துக் கொள்ளுங்கள். இராணுவ வலிமை, செல்வச் செருக்கு-இவ்விரண்டிலும் இராமனுடைய கோசல நாட்டைக்காட்டிலும் இராவணனுடைய இலங்கைதான் மேம்பட்டு விளங்கியது. இருந்தாலும், இலங்கையில் வாழ்ந்தவர்கள் இரக்கம் அற்ற அரக்கர்கள். கோசல நாட்டில் வாழ்ந்தவர்கள் மாண்பில் சிறந்த மனிதர்கள். அதனுல், இலங்கையைப் பார்க்கிலும் கோசல நாடுதான் இலக்கியங்களில் மிகப்பெருமைக்கு உரியதாய்ப் பேசப் படுகிறது.

இன்று அமெரிக்காவும் ரஷ்யாவும் இருப்பது போல், நம் பாரத நாடும் தனது நீண்ட வரலாற்றின் பல்வேறு காலப் பகுதிகளில் உலகிலேயே தலைசிறந்த இராணுவ வல்லரசாக விளங்கி இருக்கிறது. உலகிலேயே தலைசிறந்த தொழில் வளமும் செல்வச் செருக்கும் பெற்ற திருநாடாக

விளங்கியிருக்கிறது. அப்போதுங்கூட, இந்த நிலையற்ற சிறப்புக்களின் அடிப்படையில் அதன் நிலையான பெருமை உருவாக்கப்பட வில்லை. இந்தியாவின் நிலையான பெருமை, பல்லாயிரம் ஆண்டுகளாய் இந்திய மக்களின் இரத்தத்திலேயே ஊறிப்போயிருக்கும் ஒப்புயர்வற்ற பண்பாட்டு முதிர்ச்சியின் அடிப் படையிலேயே உருவானது !

இந்திய மக்களின் பண்பாடு என்பது, இந்து மதத்தின் பண்பாடே அன்றி வேறு எதுவுமே அல்ல. இதை எவரும் மறுக்க முடியாது; மறக்கவும் முடியாது.

இந்து மதத்திலே அகச்சமயம், புறச் சமயம், அகப்புறச் சமயம், புறப்புறச்சமயம் என்னும் நான்கு பிரிவுகள் இருக்கின்றன. இறைவன் ஒருவன் இருக்கிறான் என்பதையே ஒப்புக்கொள்ளாத பௌத்தம், சமணம் போன்ற மதங்கள்கூட இந்த நான்கு பிரிவு களுக்கு உள்ளே அடங்கிவிடுகின்றன ! காரணம், இந்த மதங்கள் இந்துக்களின் அடிப்படைப் பண்பாடுகளுக்குப் புறம்பான மதங்கள் அல்ல.

பொதுவாக :

உலகில் உள்ள எல்லா மதங்களுமே தனி மனிதனின் ஒழுக்க நெறிகளைத்தாம் வலியுறுத்துகின்றன. அந்த ஒழுக்க நெறி களில், ஒருசிலவற்றைத் தன் அடிப்படை அறங்களாகக்கொண்டு இருக்கிறது கிறிஸ்துவ மதம். வேறு சிலவற்றைத் தன் அடிப்படை அறங்களாகக்கொண்டு இருக் கிறது இஸ்லாமிய மதம். மற்றும் சில வற்றைத் தன் அடிப்படை அறங்களாகக் கொண்டு இருக்கிறது இந்து மதம்.

ஒரு நாட்டு மக்கள் எந்த மதத்தை மிகுதி யாகப் பின்பற்றுகிறார்களோ, அந்த மதத்தின் அடிப்படை அறங்களே அவர்களது இயல் பான பண்பாடுகளாக உருப்பெற்றுவிடுகின் றன. அந்த முறையில், கிறிஸ்துவ மதத்தின் அடிப்படை அறங்களே மேலை நாட்டு மக்களின் இயல்பான பண்பாடுகளாக உருப் பெற்று விளங்குகின்றன. இஸ்லாமிய மதத்தின் அடிப்படை அறங்களே அரபு நாட்டு மக்களின் இயல்பான பண்பாடுகளாக உருப் பெற்று விளங்குகின்றன. இந்து மதத்தின் அடிப்படை அறங்களே நம் பாரத நாட்டு மக்களின் இயல்பான பண் ாடுகளாக உருப் பெற்று விளங்குகின்றன. இதை எவருக் காவது மறுக்கத் துணிவு உண்டா ?

உள்ளத்தூய்மை, நிதானம், மனநிறைவு, உண்மை, வன்முறை இன்மை,

இவைதாம்,

இந்து மதத்தின் அடிப்படை அறங்கள்.

இவைதாம்,

இந்திய மக்களின் இயல்பான பண் பாடுகள்.

சந்திர குப்தன், அசோகன், இராசராச சோழன், கிருஷ்ண தேவராயர் - இவர்கள் எல்லாரும் தத்தம் காலத்தில் உலகிலேயே தலைசிறந்த பேரரசர்களாக விளங்கியவர்கள். அத்தகைய பொற்காலங்களிலும் சரி, நாடு அடிமைப்பட்டு இருந்த காலங்களிலும் சரி, பாரதநாடு அதன் உயரிய பண்பாடுகளுக் காக உலகு எங்கிலும் பெருமதிப்போடு விளங்கி வந்து இருக்கிறது. இது வரலாறு கூறும் உண்மை. 'இந்தப் பண்பாடுகளின் உறைவிடமாகத் திகழ்ந்த ஒரே காரணத் தினால்தான், மாபெரும் உலகத்தலைவர் களில் ஒருவர் என்ற உயர் இடம் பெற்று இருந்தார் நமது நேருஜி.

இன்றைக்கும் உலக நாடுகள் சபையில் நம்முடைய பாரத நாட்டுக்கு ஓரளவு செல்வாக்கு இருக்கிறது என்றால், அது நமது படைபலத்தாலோ, பணபலத்தாலோ ஏற்பட்டது அல்ல. நமது பண்பின் பலம் ஒன்றினாலேயே அது ஏற்பட்டது. அந்தப் பண்பின் பலத்தை நம்மிடம் உருவாக்கித் தந்து இருப்பது நமது இந்து மதம் ஒன்றே !

இந்து மதம் ஒன்றே !

இந்து மதம் ஒன்றே !

எனவே,

எதிர்காலத்தில் நாம் உலக நாடுகளின் நடுவில் ஒரு தனிப்பெரும் செல்வாக்கு

உள்ள நாடாகத் திகழ வேண்டுமானல், நாம் நமது இந்து மதப் பண்பாடுகளை இன்னும் சிறப்பாக வளர்த்து வலுப்படுத்திக்கொள்ள வேண்டும். நம் பாரத நாட்டின் எதிர்கால மேம்பாட்டுக்கு, இந்து மதத்தை விட்டால் வேறு கதியே கிடையாது என்பது என்னுடைய உறுதியான உரை.

நம் பாரத நாட்டில் எத்தனையோ மதங்கள் இருக்கின்றன. அத்தனை மதங்களின் சிறப்பான அம்சங்களையும் இந்து மதம் தன் அகத்தே கொண்டுள்ளது. இதனால்தான் ஓர் இந்துவால் பிற மதங்களின்மீது வெறுப்புக்கொள்ள முடியவில்லை!

எல்லா மதங்களையும் தனக்குச் சம்மத மாகக் கருதுவதுதான், ஓர் இந்துவின் இயல் பான மனப்பான்மையாக இருக்க வேண்டும். ஆனால் அதே வேளையில், அவன் தன்னுடைய மதத்தின் சாரமான உட்பொருள்களை உணர்ந்து இருக்கவும் வேண்டும். அப்படி உணராவிட்டால், இந்து மதத்தின்மீது அவனுக்குப் பற்று உண்டாகாவிட்டால், ஓர் இந்துவாகப் பிறந்த பயனை அவனால் அடைய முடியாது போய்விடும்!

இந்துவாகப் பிறந்ததனால் ஏற்படும் பயன் என்ன?

தான் பிறந்த நாட்டுக்குப் பெருமை தேடித் தரும் வண்ணம் தன் வாழ்க்கையை எவன் அமைத்துக்கொள்கிருனே, அவன்தான் ஓர் இந்துவாகப் பிறந்ததன் பயனை அடைந்த வன். இந்திய நாட்டின் பெருமையே இந்து மதத்தின் வளர்ச்சியில்தான் அடங்கியிருக் கிறது என்றால், அந்த இந்து மதத்தின் வளர்ச்சியானது ஒவ்வொரு தனிப்பட்ட இந்துவின் சிந்தனையிலேயும் அடங்கி இருக் கிறது!

இப்போது இருப்பதைக்காட்டிலும், இந்துக் களின் எண்ணிக்கை எட்டு மடங்கு கூடுத லாகப் பெருகிவிட்டாலும், இந்து மதம் வளர்ச்சி அடைந்துவிட்டதாகக் கருத முடி யாது. ஏனென்றால், ஒரு மதத்தின் வளர்ச்சி யானது அதைப் பின்பற்றுபவர்களின் எண்ணிக்கையைக்கொண்டு கணக்கிடப் படுவது அல்ல!

மக்கள் தொகையை வைத்துக் கணக்குப் பார்த்தால், ஆழ்வார்கள் நாயன்மார்களின் காலத்தில் இருந்ததைவிட இந்துக்களின் எண்ணிக்கை இப்போது பல மடங்கு பெருகித் தான் இருக்கிறது. அதைக்கொண்டு, அந்தக் காலத்தைக்காட்டிலும், இந்தக் காலத் தில் இந்து மதம் பல மடங்கு வளர்ச்சி அடைந்துவிட்டது என்று சொல்ல முடியுமா?

மதத்தின் வளர்ச்சி மக்கள் தொகையில் இல்லை. அந்த மக்களின் தீவிரமான மதப் பற்று, அந்தப் பற்றின் காரணமாக அவர்கள் கையாளுகிற மத ஒழுக்கம்—இவற்றில்தான் அது அடங்கியிருக்கிறது!

மேலை நாடுகளில்கூட இன்று இந்து மதத் தின் பெருமை ஓரளவு உணரப்படுகிறது என்றால், அதற்கு அந்தக் காலத்தில் ஒரு விவேகானந்தரும், இந்தக் காலத்தில் ஓர் அரவிந்தருந்தான் காரணமாய் இருந்திருக் கிருர்கள்! இந்து மதத்தின் அடிப்படை அறங்களில் ஒன்றாகிய வன்முறையின்மையை (அதாவது, அகிம்சை நெறியை) இன்று அமெரிக்க நீக்ரோ தலைவர்களுங்கூடப் போற்றிக் கையாளுகிருர்கள் என்றால், அதற்கு ஒரேயொரு காந்தி அடிகள்தாம் காரணமாய் இருந்திருக்கிருர். அந்தக் காந்தியடிகளைப் போல், விவேகானந்தரைப் போல், அரவிந்தரைப் போல், இன்னும் ஒரு சில வீரர்களை நம் தாயார்கள் ஈன்று எடுத் தால் போதும். அப்புறம் நம் பாரத நாடு தான் உலகத்துக்கே வழிகாட்டக்கூடிய ஒரு தலையாய நாடாக இருக்கும்!

துரதிர்ஷ்டவசமாக, இப்போது நமது தாய் மார்களில் பலர், தெய்வபக்தி இல்லாதவர் களையும், நாட்டுப்பற்று இல்லாதவர்களையும், மொழிப்பற்று இல்லாதவர்களையும், கட்சி களின் பெயரால் காலித்தனங்கள் செய்கின் றவர்களையுமே பெற்றுத் தள்ளிக்கொண் டிருக்கிருர்கள்!

இன்றைக்கு ஆயுத பலமும் பண பலமுமே ஒரு நாட்டின் பிரச்னைகளைத் தீர்க்கக் கூடியவை என்ற கருத்து, உலகு எங்கிலும் பரவலாக இருந்து வருகிறது. இந்த இரு வகை வலிமைகளையும் பெருக்கிக்கொள்வதற் காகவே, விஞ்ஞான ஆராய்ச்சிகள் இன்று செய்யப்படுகின்றன. ஆனால், விஞ்ஞானத்தைக்கொண்டு இந்த அண்ட முகட்டையே அளாவிக்கொண்டிருக்கும் அமெரிக்கா, ரஷியா போன்ற வல்லரசுகள் கூட, இன்றைக்கும் தீராத பிரச்னைகளில் சிக்கிக்கொண்டு தவிக்கின்றன!

வாழ்க இந்து மதம்!

வளர்க அதன் பெருமை!!



## மாதம் ஒரு திருவிழா

**கா. இராமநாதன்**

செட்டியார்கள் எந்த நாட்டிற்குச் சென்றாலும் ஒருவனைக் கூடவே துணைக்கு அழைத்துக்கொண்டு போவது வழக்கம். அவன் தான் முருகன். செட்டியார்கள் அனுஷ்டான பிரம்மசாரிகளாக இருப்ப தால் முருகன் தெண்டாயுதபாணி கோலத்தில்தான் இருப்பான். அவன் அண்ணன் கணபதியும் சில சமயம் வருவான். அநேகமாக மாதம் ஒரு விழா மலாயாவில் நடைபெறும்.

சித்திரா பவுர்ணமி பேராவில் விசேஷம். வைகாசி விசாகம் ஈப்போ விலும் தைப்பிங்கிலும்; ஆவணி சதுர்த்தி சிரம்பானில் விசேஷம். புரட்டாசி நவராத்திரிக்கு சிங்கப்பூரில் பல இன்னிசைக் கச்சேரிகள் முறையாக நடைபெறும். ஐப்பசி சஷ்டி கோலப்பிலா. திருக்கார்த்திகை மூவாரும் கிள்ளானும். தைப்பூசம் பினங்கில், அரசியலார் சலுகை களுடன் எல்லா இனத்தவரும் கலந்துகொண்டு நடைபெறும். பத்து மலையில் தமிழர் நடத்துவது பெருங் கொண்டாட்டம். தனி ரயில் பஸ் போகும். மாசிமகம் மலாக்காவிலும், கிட்டாவிலும் சிறப்பாய் நடை பெறும். பங்குனி உத்தரம் கோலாலம்பூரில் முன்னர் மூன்று நாள் நடந்தது. இப்பொழுது ஒரு நாள் முருகன் வெள்ளி ரதத்தில் பவனி வருவான்.

செட்டியார்கள் முருகனுக்கு நல்ல கோயில் பல இடங்களில் கட்டிக் கொடுத்திருக்கிறார்கள். யுத்தகாலத்தில் ஆண்டவன், வீட்டில் குடியிருக்க நேர்ந்தது. சிரமம் வராமல் அவர்களையும் இதர பக்தர்களையும் காப்பாற் றினான் முருகன்.

('நான் கண்ட மலேயா' என்னும் நூலிலிருந்து)

# திருவண்ணுமலையும் நகரத்தார்களும்

அ. க. அ. சித. அள. சிதம்பரம் செட்டியார்

நாட்டுக்கோட்டை நகரத்தார்கள், தமிழ் நாட்டினுள்ள நூற்றுக்கணக்கான இனத்தார்களில் குறிப்பிடத்தக்க சிறு இனத்தவர்களாக இருக்கிருர்கள். எண்ணிக்கை அல்லது மக்கள் தொகையில் இவர்கள் மிகச் சிறிய அளவினர். அப்படியிருந்தும் இவர்கள் எங்கும் புகழ் பெற்றிருப்பதற்குக் காரணம், இவர்கள் தலைமுறை தலைமுறையாகச் செய்து வந்திருக்கும் தர்மமே. எந்த தர்மத்தைச் செய்தாலும் அதைப் பெரிதாகவும் சிறப்பாகவும் விளம்பரம் இல்லாது, பிரச்சாரம் இல்லாது செய்யும் பழக்கம் உடையவர்கள். அடக்கமாகிய இந்தக் குணம் இவர்களிடம் இருப்பதை ஒரு குறை என்று தவருக எண்ணி, இப்போது வேறு சிலர், நகரத்தார்கள் செய்த தர்மங்களை மூடி மறைக்கவும், தங்களுடைய அதிகாரத்தையும் செல்வாக்கையும் பயன்படுத்தி வருகிருர்கள். இத்தகைய தவருன பிரச்சாரம் நல்லவர்களின் உள்ளங்களையெல்லாம் புண்படுத்துகிறது. இந்தப் போக்கு நீடித்தால் அறஞ்செய்ய முன் வருபவர்கள்கூடச் சற்று யோசிப்பார்கள். இந்தச் சூழ்நிலையில் இத்தகைய ஒரு கட்டுரையை எழுத வேண்டியது என்னுடைய கடமை ஆகிறது. இக்காலத்தில் கல்வித் தர்மம் மிகவும் முக்கியமாக விளங்குகிறது. தனி ஒருவர் தம் பணத்தைக்கொண்டு ஒரு பெரிய பல்கலைக் கழகம் தொடங்கினுர் என்று இந்திய நாட்டில், செட்டி நாட்டரசர் ராஜா சர் அண்ணுமலை செட்டியார் அவர்கள் நிறுவிய அண்ணுமலைப் பல்கலைக் கழகம் ஒன்றை மட்டுமே குறிப்பிட முடியும்.

> "தில்லைப் பதியுடையான் சிற்றம் பலம்தன்னில்
> அல்லும் பகலும்நின் ருடுகின்ருன்-எல்லைக்கண்
> அண்ணு மலைமன் அமைத்த கலைக்கழகம்
> கண்ணுரக் கண்டு களித்து."

என்று கவிமணி தேசிக விநாயகம் பிள்ளை அவர்கள் அண்ணுமலை வள்ளலின் கொடைச் சிறப்பைப் பாடியுள்ளார்.

வள்ளல் கோட்டையூர் டாக்டர் அழகப்ப செட்டியாரவர்கள், காரைக்குடியில் ஏராளமான கல்லூரிகளையும், சென்னை—கிண்டியில் டாக்டர் அழகப்பச் செட்டியார் காலேஜ் ஆப் டெக்னுலைஜியையும் நிறுவி உள்ளார்கள்.

ஆ. தெக்கூர் கலைத்தந்தை கருமுத்து தியாகராசச்செட்டியார் அவர்கள், மதுரையில் பல கல்வி நிலையங்களை நிறுவி, ஒரு பல்கலைக்கழகம் மதுரையில் ஏற்படுவதற்கான அடித்தளத்தை அமைத்துள்ளார்கள்.

இவை தவிர, இன்னும் ஏராளமான ஆரம்பப் பள்ளிகள், ஆடவருக்கும் மகளிருக்குமான சிறந்த உயர்நிலைப் பள்ளிகள், நல்ல கட்டட வசதிகளுடன் தமிழ்ப்புலவர் கல்லூரிகள், பட்டப் படிப்பு உள்ள ஆடவர் கல்லூரிகள், மகளிர் கல்லூரிகள், பாலிடெக்னிக்குகள் முதலியவற்றையெல்லாம் ஏராளமாக நகரத்தார்கள் ஏற்படுத்தியிருக்கிருர்கள்.

இவற்றுக்கெல்லாம் முன்னேடியாக நகரத்தார்கள் தேவாரப் பாடசாலைகளையும், வேத பாடசாலைகளையும் ஏற்படுத்திஞர்கள். இவற்றில் பயில்பவர்களுக்கு உடையும் உணவும் தங்குமிடமும் கொடுத்து வருவது நகரத்தார்களின்

இயல்பு. திருவண்ணாமலையில் ஒரு நூற்றாண்டுக்கு முன் ஏற்பட்ட மெ. க. அன்ன சத்திரத்தில் பல வெளியூர் மாணவர்களுக்கு உடையும் உணவும் தங்குமிடமும் இன்றும் இலவசமாகக் கொடுக்கப் படுகின்றன. இந்தத் தர்மங்கள் எப்போதும் நின்று நிலைத்து நீடித்து நடந்து வரவும் ஏற்பாடுகள் செய்யப் பெற்றிருக்கின்றன.

''ஆலயம் தொழுவது சாலவும் நன்று'' என்ற ஔவையார் வாக்குக்கு ஏற்ப, நகரத்தார்கள் ஆலயங்களில் போய்த் தொழுவதோடு மட்டு மன்றி, அதற்கு வசதியாகக் கல் திருப்பணி இல்லாத இடங்களில் கற்கோயில்களைக் கட்டியும், ஏற்கெனவே கற்கோயில் இருந்த தலங்களில் அவற்றைப் புதுப்பித்தும் வந்திருக்கிறார்கள். குறிப்பாகத் தேவாரம் பெற்ற தலங்களில், நகரத் தார்களுடைய கை வண்ணத்தைக் காணலாம். தமிழ்நாட்டிலுள்ள எந்தப் பெரிய சிவன் கோயி லானாலும், அந்தக் கோயிலின் வளர்ச்சியில் நகரத்தார்களுக்குப் பெரும்பங்கு இருக்கும். மதுரை மீனாட்சி அம்மன் கோயிலை இன்றைய நிலையில் நமக்குத் தந்தவர்கள், அமராவதிபுதூர் வயினாகரம் குடும்பத்தாரே. இராமேச்சுரம் இராமநாத சுவாமி கோயிலை 19-ஆம் நூற்றாண்டின் இறுதியில் மிகப்பெரிய அளவில் புதுப்பித்த பெருமை இராமநாதபுரம் சேதுபதிகளுக்கும் தேவகோட்டை ஜமீன்தார் அழ. அரு. குடும்பத் தாருக்கும், மற்ற நகரத்தார்களுக்கும் உரியது. பஞ்சபூத ஸ்தலங்களில் ஒன்றான திருவானைக்கா திருக்கோயில், காருடுகாத்தான் சா. ராம. சித. சிதம்பரம் செட்டியாரவர்களுடைய பெருமுயற்சி யால் திருப்பணி செய்து வைக்கப்பெற்றது. இவ்வாறே சிதம்பரத்தில் நடராஜர் கோயில், சா. ராம. மு. குடும்பத்தாராலும், நகரத்தார் களின் பொருளுதவியாலும் பிற்காலத்தில், திவான்பகதூர் ராமசாமி செட்டியார், ராஜா சர் அண்ணாமலைச் செட்டியார் ஆகியோராலும் திருத்த முறத் திருப்பணி செய்யப்பெற்றது. விருத்தா சலம், திருவெண்காடு முதலிய இடங்களில் உள்ள பல கோயில்களும் வயினாகரம் குடும்பத்தார் செய்த திருப்பணிகளுள் குறிப் பிடத்தக்கனவாகும். சோழநாடாகிய தஞ்சை மாவட்டத்தில் ஏறத்தாழ நூறு கோயில்களில் நகரத்தார்கள் திருப்பணி செய்திருக்கிறார்கள். தொண்டை நாடு, நடு நாடு, கொங்கு நாடு ஆகியவற்றிலும் நகரத்தார்களின் சிவத்தொண்டு சிறந்து விளங்குகிறது.

தமிழ்நாட்டுக்கு அப்பால் ஆந்திரப் பிரதேசத் தில் திருக்காளத்தியிலும், மற்றும் மகாராஷ்டிரம், வங்காளம், பீகார், உத்தரப்பிரதேசம் ஆகிய வற்றிலும் நகரத்தார்கள் திருப்பணி செய்துள்ள கோயில்கள் பல உள்ளன. காசித் திருத்தலத்தில் 150 ஆண்டுகளாக அன்றாடப் பூஜைகளை நகரத் தார்கள்தான் சிறந்த முறையில் செய்து வரு கிறார்கள் என்பதும் எல்லோருக்கும் தெரிந்ததே.

இன்னும் கடல் கடந்த நாடுகளான இலங்கை, பர்மா, சிங்கப்பூர், மலேசியா, வியட்நாம், செய்கோன், இந்தோனேசியா, மொரீசியஸ் ரி-யூனியன் தீவுகள் ஆகியவற்றிலும் நூற்றுக் கணக்கான கோயில்களைக் கட்டி, இந்து மதத் தையும், இந்திய கலாச்சாரத்தையும் பரப்பிப் பாதுகாத்து வருபவர்கள் நாட்டுக்கோட்டை நகரத் தார்களே!

1976-ஆம் ஆண்டில் அமெரிக்க நாடு ஏற்பட்ட இரண்டாவது நூற்றாண்டு விழாக் கொண்டாடப்பெற்றது. இதையொட்டி நியூயார்க் மாநகரில் ஒரு ஹிந்துக் கோயில் முடிக்கப்பெற்றுக் கும்பாபிஷேகம் நடைபெற் றது. இந்த ஏற்பாட்டிலும் நகரத்தார் களின் பொருளுதவியும் முயற்சியும் மிகவும் முக்கியமாக இருந்து வருகின்றன.

மேலே சொல்லப்பட்டதற்கு ஏற்ப, நகரத் தார்கள் திருவண்ணாமலையிலும் தங்களுடைய தர்மங்களைச் செய்து வருகிறார்கள் நகரத்தார் களுக்கும், திருவண்ணாமலைக்கும் பல நூற்றாண்டு களாகத் தொடர்பு உண்டு. அண்ணாமலையார் துணை என்றுதான் நகரத்தார்கள் கடிதத்தின் ஆரம்பத்திலும் இறுதியிலும் எழுதுவார்கள். பஸ், ரயில் முதலிய போக்குவரத்து வசதிகள் ஏற்படு வதற்குப் பல தலைமுறைக்கு முன்பே நகரத்தார் கள் செட்டி நாட்டிலிருந்து மாட்டுவண்டிகளில் புறப்பட்டுப் பல நாட்கள் பிரயாணம் செய்து, திருவண்ணாமலைக்கு வந்திருக்கிறார்கள். இதிலிருந்து அவர்களுடைய பக்தியும், சிரத்தை யும், அண்ணாமலையாரிடத்தும் உண்ணாமுலை அம்மனிடத்தும் அவர்களுக்குள்ள ஈடுபாடும் புலனாகும். சிறந்த முறையில் இக்கோயிலை விரி வாக அமைத்துப் பல மண்டபங்கள், குளங்களை அழகாகவும் காலத்திற்கு ஏற்பவும் நகரத்தார்கள்

உருவாக்கியிருக்கிருர்கள். எதைச் செய்தாலும் மிகச்சிறப்பாகவும், உறுதியாகவும் செய்வது நகரத்தார்களுடைய இயல்பு. ஒரு காசுகூட வீணுகாமலும், சொந்த வேலை போலக் கவனிப்பதும், அனுபவமும் தெய்வ பக்தியும் நிறைந்த திறமையான ஸ்தபதிகளையும் மற்றும் தொழிலாளர்களையும் நியமித்து நகரத்தார்கள் உடனிருந்து மேற்பார்ப்பதும், 'சிவன் சொத்து குல நாசம்' என்பதை உணர்ந்து அதற்கு ஏற்பக் கோயில் காரியங்களைச் செய்வதும் நகரத்தார்களுடைய பழக்கம் ஆகும்.

திருவண்ணுமலையில் நடைபெறும் திருவிழாக்கள் மிகவும் புகழ் பெற்றவை. இவ்விழாக்களின் போது பயன்படுத்தப்படும் வாகனங்களும், இறைவன் இறைவியருக்கு அணிவிக்கப்பெறும் நகைகளும், நகரத்தார்களின் கொடைகளுள் குறிப்பிடத்தக்கன.

இக்கோயிலில் ஐம்பது ஆண்டுகளுக்கு முன் அ. க. அ. மெ. குடும்பத்தார் சுமார் ஒரு லட்ச ரூபாய்ச் செலவில் மின் விளக்குகளைப் போட்டார்கள்.

கோயிலுக்குள் செய்யப்பட்ட செலவுகள் ஒரு புறம் இருக்க, ஓயாமாரி மடம் முதலிய பல மடங்களையும் அன்ன சத்திரத்தையும் பாடசாலைகளையும் நகரத்தார்கள் திருவண்ணுமலையில் ஏற்படுத்தியிருக்கிருர்கள்.

அடி அண்ணுமலை என்றும், அணி அண்ணுமலை என்றும் சொல்லப்படும் கோயிலை ஆதி அருணுசலம் என்பர். இக்கோயிலை கோட்டையூர் அ. க. அ. மெ. குடும்பத்தார் மூன்றில் இரண்டு பங்கும், ராம. பெ. வகையினர் ஒரு பங்கும் செலவு செய்து, அறுபது ஆண்டுகளுக்கு முன் திருப்பணி செய்து வைத்தார்கள்.

1967-இல் முக்கியமான பழுதுகளைப் பார்த்து, கும்பாபிஷேகத்தையும் நல்ல முறையில் நடத்தி வைக்கும் பேறு எனக்குக் கிடைத்தமைக்கு நான் மிக்க மகிழ்ச்சியடைகின்றேன்.

கோட்டையூர் ராவ்பகதூர் வீரப்ப செட்டியார் அவர்களைப் பற்றி அதிகம் குறிப்பிட வேண்டும். அவர்கள் தங்கள் ஆயுள் காலம் முழுவதும் இக் கோயிலின் டிரஸ்டியாக இருந்தும், லட்சக் கணக்கில் தங்கள் சொந்தப் பணத்தையும் மற்றவர்களிடம் வசூலித்தும் செலவிட்டுத் திருப்பணிகளைச் செய்தார்கள். உத்சவங்களைச் சிறப்பாக நடத்தி வைத்தார்கள். ஏராளமான சொத்துக்களை இந்தக் கோயிலுக்குச் சேர்த்தார்கள். திருவண்ணுமலை மக்கள், வீரப்ப செட்டியார் அவர்களை என்றென்றும் நன்றியுடன் நினைக்கக் கடமைப்பட்டவர்கள் ஆவார்கள்.

கோட்டையூர் மெ. க. குடும்பத்தாரும், மற்றும் ராஜா சர் அண்ணுமலைச் செட்டியார் குடும்பத்தினரும், இராமச்சந்திரபுரம் தீ. நா., தீ. சொ., தீ. அ. குடும்பத்தார்களும் ஏனைய நாட்டுக் கோட்டை நகரத்தார்களும் திருவண்ணுமலைத் திருப்பணிகளில் பெரும் பங்கு கொண்டிருக்கிருர்கள்.

1976-இல் நடைபெற்ற கும்பாபிஷேகத்தையொட்டிப் பல லட்சம் ரூபாய் செலவில் திருப்பணி வேலை மேற்கொள்ளப்பெற்றது. இதிலும் நகரத்தார்களுடைய பங்கு முக்கியமானது. அறங்காவலர் குழுத்தலைவர் திருவண்ணுமலை டி. வி. சுப்பிரமணியன் செட்டியாரவர்களும் காலஞ்சென்ற சி. வி. சிடி. வேங்கடாசலம் செட்டியாரவர்களும் சில ஆண்டுகளுக்கு முன் சிங்கப்பூருக்கும் மலேசியாவிற்கும் சென்று, திருப்பணிக்கு நகரத்தார்களிடம் நிதி திரட்டி வந்துள்ளார்கள். இந்தத் திருப்பணி தொடங்கும் முயற்சியில் காலஞ்சென்ற சி. வி. சிடி. வேங்கடாசலம் செட்டியார் அவர்களும், தமிழ்க்கடல் ராய. சொ. அவர்களும் கொண்டிருந்த அக்கறையையும் ஆர்வத்தையும் இந்தச் சந்தர்ப்பத்தில் நன்றியுடன் நினைப்போமாக.

1903-ஆம் வருஷத்திலும், 1944-ஆம் வருஷத்திலும் அண்ணுமலையார் கோயில் கும்பாபிஷேகத்தை நடத்தியது போலவே, 1976-ஆம் வருஷத்திலும் கும்பாபிஷேகம் நடத்தும் செலவையும், பொறுப்பையும் நகரத்தார்களே மனமுவந்து ஏற்றுக்கொண்டிருக்கிருர்கள்.

அண்ணுமலையார் கோயில், அளவாலும் சிறப்பாலும் பெரியது. இவ்வளவு பெரிய கோயிலைக் கட்டிக் காப்பதற்கு வேண்டிய வருமானம் இல்லாதது ஒரு பெரிய குறை. இந்தக் குறை நீங்க அண்ணுமலையார்—உண்ணுமுலை அம்மன் திருவருளை வேண்டுகிறேன்.

இந்தக் கோயிலுக்குக் கோர்ட்டாரால் ஏற்படுத்தப் பெற்றிருக்கிற ஸ்கீம்படி, அறங்காவலர் குழுவில் நகரத்தார்களுக்கு ஒரு ஸ்தானம் ஒதுக்கப்பட்டிருக்கிறது. நகரத்தார்கள் அண்ணு

மலையாரை பக்தி சிரத்தையோடு தொழுது, தங்களால் இயன்ற தொண்டுகளைச் செய்ய விரும்புகிறார்களே தவிர, நகரத்தார் எவரும் பல ஆண்டுகளாக அண்ணுமலையார் கோயில் அறங் காவலராக இருக்க விரும்பவில்லை.

பெரிய அளவில் இப்போது மேற்கொள்ளப் பட்டிருக்கும் திருப்பணியை அறங்காவலர் குழுத் தலைவராக இருந்துவரும் டி. வி. சுப்பிரமணியன் செட்டியார் அவர்கள் பெரும் பிரயாசையுடன் பல ஆண்டுகளாக அல்லும் பகலும் உழைத்தும், பல இடங்களுக்குச் சென்று, அதிகாரிகளையும், பக்தர்களையும் சந்தித்து நன்கொடை வசூலித் தும் செய்திருக்கிறார்கள். அவர்களும், அவர் களுக்கு உறுதுணையாக இருந்து வரும் திரு. மாணிக்கவேலு அவர்களும், ஏனைய அறங் காவலர்களும், யாகசாலை அமைப்பதற்காக அல்லும் பகலும் பாடுபட்டு உழைத்துத் தளரா ஊக்கத்துடன் இன்றும் தொண்டு செய்துவரும் அறங்காவலர் குழுத்தலைவராக இருந்த திருவண்ணுமலை எஸ். எஸ். வி. எஸ். முத்தையா செட்டியார் அவர்களும், முழு ஒத்துழைப்பைத் தந்துள்ள பொது மக்கள் அனைவரும், நமது மனப் பூர்வமான பாராட்டுக்கு உரியவர்கள் ஆவார்கள். நகரத்தார்களின் சார்பாக அவர்கள் எல்லோ ருக்கும் நன்றி தெரிவித்துக்கொள்ளுகிறேன்.

ஆரம்பம் முதல் எங்களை இந்த நற்பணியில் ஈடுபடச் செய்து, உற்சாகப்படுத்தி, ஒவ்வொரு விஷயத்தையும் செவ்வனேயும் சிறப்பாகவும் செய்யும்படியும், தங்களுக்கு இடை இடையே ஏற்படும் சிறு உடல் நலக்குறைவையும் பொருட் படுத்தாது, அருள்மிகு அண்ணுமலையாரின் திருக் குட நீராட்டு விழாவை மிகச்சிறப்பாகச் செய்து முடிக்கும் பாக்கியத்தையும் நல்லாசியையும் வற்ருது வழங்கி வரும் கோவிலூர் மடாதிபதி தவத்திரு இராமநாத ஞான தேசிகர் அவர்களுக் கும், தங்களின் பல அலுவல்களுக்கும் மத்தியில் அண்ணுமலையார் கும்பாபிஷேகக் காரியங்களில் சகல பொறுப்புகளையும் ஏற்றுத் திறம்படவும் போற்றுவதற்குரிய முறையிலும் செய்து முடித்துத் தந்த கம்பன் அடிப்பொடி சா. கணேசன் அவர்களுக்கும், திரு. மெ. செ. முத்துராமன் செட்டியாரவர்களுக்கும், தேவகோட்டை அ.ராம. அ. லெ. அ. முவீ. முத்துவீரப்ப செட்டியார் அவர்களுக்கும், எனக்கு உறுதுணையாக இருந்து, நான் மேற்கொள்ளும் முயற்சிகளை வெற்றியாக முடிக்க உதவிவரும் ராம. அழ. ராம. ராமநாதன் செட்டியார் அவர்களுக்கும், மலர் வெளியிடுவதற் கும் திருக்கல்யாண மண்டபத்தைப் புதுப்பிப்பதற் கும் மிகச் சிரத்தையுடனும் ஆர்வத்துடனும் ஒத்துழைத்து எனக்கு உதவிய திரு. T. N. M. அருணசலம் செட்டியார் அவர்களுக்கும், தேவாரக் கோஷ்டியைத் தாங்களே சகல செலவுகளையும் பொறுப்பேற்று அழைத்து வந்து சிறப்புற நடத்தித் தந்த பாகனேரி முத்துப்பழநியப்ப செட்டியாரவர்களுக்கும், யாகசாலை மின்விளக்கு அலங்காரங்களைத் தங்களுடைய கைங்கரியமாக மிகச் சிறப்பான முறையில் செய்து திருக்குட நீராட்டு விழாவை நடத்துவதற்கு உதவிய, திண்டுக்கல் அங்கு விலாஸ் உரிமையாளர்களுக் கும், பொதுவாகத் திருக்குட நீராட்டு விழா எல்லா வகையிலும் சிறப்புற நடைபெற எல்லா உதவி களும் செய்து தந்த பொது மக்கள் அனைவருக் கும், கட்டடங்கள் தந்துதவிய பெருமக்களுக்கும் ஸ்ரீ ரமணசிரமத்துக்கும், எனது மனம் நிறைந்த நன்றியையும், பாராட்டையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

அனைவருக்கும் அண்ணுமலையார்—உண்ணுமுலை அம்மன் திருவருள் உண்டாவதாக!

(அருள்மிகு அண்ணுமலையார் திருக்கோயில்
கும்பாபிஷேக மலரிலிருந்து
—பதிப்பாசிரியர் ; 'சோமலெ')

# என்றென்றும் தழைத்து வாழ்க !

புலவர் பெரி. ஆறுமுகம்

எண்ணரிய ஆன்றோர்கள் இயைந்தே ஆளும்
எழிலார்ந்த **நெற்குப்பை** நகரில் வாழும்
தண்ணளியர் **சாத்தப்ப குடும்ப** நல்லார்
தாங்கண்ட விழாப்பெருமை யாரே சொல்வார் ?
எண்ணமெலாம் ஊருக்கே என்று சொன்னார்
ஏந்தலவர் **சாத்தப்பர்** ; கொடையில் வல்லார் !
பண்ணரிய அறநிலையம் தந்தார் அன்று
பார்புகழ நூற்றாண்டு கண்டார் இன்று. (1)

நகரத்தின் நடுவினிலே மடத்தைக் கட்டி,
நலிவுற்ற காலத்தில் கஞ்சித் தொட்டி,
முகமலரத் திருமணங்கள் முடிக்கும் கோட்டம்,
முருகனுக்கும் சிவனுக்கும் மாலைத் தோட்டம்,
அகமகிழ்ந்து நீராடி மகிழும் கேணி,
அழகான நந்தவனம் அரிதாய்ப் பேணித்
தகவுடனே ஊற்றுகிற தண்ணீர்ப் பந்தல்,
தசராவின் கொண்டாட்டம் தந்த ஏந்தல் ! (2)

நல்வள்ளல் சாத்தப்பா குடும்பத் தாரும்
நாடுபுகழ் **நாச்சம்மை** ஆச்சி யாரும்
கல்லாமை இல்லையெனும் நிலையைப் போக்கும்
கனிவுதரும் நல்லமுதப் பணிகள் ஆக்கும்
கல்விதரும் **சாத்தப்பா பள்ளி** கண்டார்
காலமெலாம் புகழ்பாடும் கவிதை கொண்டார் !
நல்லறமாம் அறப்பயிரே வளர்த்தார், வாழ்க !
நானிலத்தில் **என்றென்றும் தழைத்து வாழ்க !** (3)

# நகரக் கோயில்கள்

'தமிழண்ணல்' இராம. பெரியகருப்பன், எம்.ஏ.

"கோயில் இல்லா ஊரில் குடியிருக்க வேண்டா' என்பது ஔவைப் பெருமாட்டியின் வாக்கு. இதனை நூற்றுக்கு நூறு பின்பற்றி வாழ்ந்த வர்கள் நகரத்தார்கள் எனலாம். ஏனெனில், தாம் குடியிருக்கும் ஊர்தோறும், கோயில் இல்லாக் குறை நீங்கத் தாமே பொருள் சேர்த்துத் தமக் கெனக் கோயில் கட்டிக்கொண்டு வாழ்வது அவர் கள் மரபாகும். முன்பே பிறக்கும் உரிமையான கோயில்கள் இருப்பினும், தாம் நிலையாக வாழும் ஊர்களில் தமக்கென ஒரு கோயில் கட்டிக் கொண்டாலன்றி அவர்கள் மன நிறைவு பெறுர். ஔவைப் பெருமாட்டியின் அருள் வாக்கினை இந் நகரத்தார் மரபினர்க்கு ஏற்பச் சிறிது மாற்றிக் கூறுவதெனில், "குடியிருக்கும் ஊர்களில் எல்லாம் கோயில் கட்டி வாழ்க!" என்று உடன்பாட்டு முகத்தாற் கூறவேண்டும்.

இங்ஙனம் தம் செலவிற் கட்டித் தமது ஆட்சிக் குள் வைத்திருக்கும் தமக்கேயுரிய கோயில்களை இவர்கள் நகரக் கோயில் என அழைப்பர். இத்தகைய நகரக் கோயில்கள் தமிழ் நாட்டில் மட்டுமன்றி, செட்டிமார்கள் சேர்ந்து வாழ்ந்த இலங்கை, பருமா, மலேயா, இந்தோசீனு போன்ற நாடுகளிலுள்ள ஊர்கள் பலவற்றிலும் உண்டு. சிறிது காலத்திற்கு முன்புவரை நகரத்தார்கள் வாழும் ஊர்களைத் 'தொண்ணூற்று ஆறு ஊர்'கள் என்பர். இவற்றுட் சில இன்று நகரங்களாக வளர்ந்து வருகின்றனவெனினும், முன்பு இவை அனைத்தும் சிற்றூர்களாகவே திகழ்ந்தன.

ஒரு சிற்றூரை எடுத்துக்கொண்டால் அங்குள்ள நகரக்கோயிலே ஆளும் இடமாகவும், அதிலுள்ள இறையே ஆள்பவராகவும், அவ்வூரிலுள்ள 'நகரப் பெருமக்கள்' அனைவரும் அக்கோயிலைச் சார்ந்த குடிமக்களாகவும் கருதப்படும் முறையில் நகரத் தார்களின் 'சிற்றூர்ச் சமூக அமைப்பு' இருப் பதை இங்கு நன்கு தெளிவுபடுத்த விழைகிறேன். ஊர்தோறும் அமைந்த நகரக் கோயில்களே அவ்வூர் நகரத்தாரை ஒன்றிப் பிணைக்கும் 'ஈர்ப்பு நிலையம்' (Gravitation centre) ஆகும். இத னின்றும் பிரிந்து போகவோ பிய்த்துக்கொண்டு போகவோ இச்சமூகத்தைச் சேர்ந்த எவராலும் எளிதில் முடிவதில்லை. அங்ஙனம் யாரும் பிரிந்து போனாலும், ஈர்ப்பு ஆற்றல் மண்டலத்தை விட்டுப் பிரிந்த விண்மீன் ஒன்று எரிந்து விழுந்து அழிந்து விடுவது போன்ற நிலைமையே ஏற்படும்.

ஒருரில் வாழும் நகரத்தார் தம்மூர்க் கோயிலை ஒட்டி 'உள்ளூர் நகரத்தார்' என்றழைக்கப்படுவர். பிற ஊர் நகரத்தார்களை 'வெளியூர் நகரத்தார்' என்பர். அருச்சனை, பூசை, கோயில் விழா முதலிய சிறப்புகளில் வெளியூர் நகரத்தார்கட்கே முதலிடம் அளிப்பர். பிறகே உள்ளூர் நகரத்தார் தமக்குரிய 'மரியாதையை'ப் பெற்றுக்கொள்வர்.

இங்கு ஒருண்மையை நினைவு கூர்தல் வேண்டும். ஒன்பது நகரக் கோயில்களும் அதன் இருபத் திரண்டு உட்பிரிவுகளும் நகரக்குடி மக்கள் பிறந்த கால்வழி முறையால் அமைவன. கும்பிடும் கோயிலை வைத்து ஒவ்வொரு கால்வழித் தலை முறையினரையும் தெளிவாக வகைப்படுத்திக் காட்டும் இம்முறை பிற நாடுகளிலோ, பிற சமூகங்களிலோ இவ்வளவு தெளிவாக உண்டா என்று ஒப்பிட்டுப் பார்க்க வேண்டும். இருபத்

திரண்டு கால்வழிகளும் ஒன்பது பெரும் பிரிவில் அடங்கும். அவ்வொன்பதும் ஒரு பிரிவாய் ஒன்றி, ஒரு புள்ளியிற் போய் நிலை பெறும். ஓரூரில் பல கால்வழியினர்—பல நகரக் கோயில்களைச் சார்ந்த பரம்பரையினர் வாழ்வர். ஆனால், இவர்களனைவரும் தம்மூர் நகரக் கோயிலின் செயல் முறைகட்கு உட்படும்போது 'உள்ளூர் நகரத்தாராய்' ஒன்று பட்டுவிடுகின்றனர். வேற்றுமையிடையே ஒற்றுமை அமைந்து கிடக்கும் சமூக அமைப்பு முறை இதுவாகும். இந்திய நாட்டின் ஒருமைப் பாட்டிற்கு வழி தேடுவார் இது போன்றதொரு முறையினை ஆழச் சிந்தித்தால் நல்வழியொன்று பிறக்கக் கூடும்.

ஊர்தோறும் இருக்கும், 'நகரக்கோயில்'தான் அவ்வூர் நகரத்தார்களின் 'அறம் (சட்டம்), ஆட்சி, நீதி' ஆகிய முத்தரப்பிற்கும் தலைமையிடமாகும். அவ்வூர் நகரத்தார்களனைவரும் அக்கோயிலைச் சார்ந்த குடிமக்களாவர். தமிழ் ஆண்டுதோறும் அக்கோயிலுக்கு ஒவ்வொரு நகரக் குடியினரும் தத்தமது வரியாகிய 'பச்சரிசியும்', 'பணமும்' உரிய விதிப்படி செலுத்திவிடுவர். அரிசி படிக் கணக்கும் ரூபாய்க் கணக்கும் ஊருக்கு ஊர் சிறிது சிறிது கூடுதல் குறைவாக இருக்கும். அக் குடியினருக்குப் 'புள்ளி' என்று பெயர். ஒவ்வொரு நகரக் கோயிலிலும் உள்ள பேரேட்டில் அவ்வூரில் எத்தனை 'புள்ளிகள்' (நகரக் குடியினர்) உள்ளன ரோ அத்துணைப் பேருக்கும் புள்ளி விவரம் இருக் கும். இது அரசினர் எடுக்கும் மக்கள் தொகைக் கணக்கைவிடத் தெளிவானது. அவர்கள் தமிழாண்டுதோறும் கோயிலுக்குச் செலுத்தும் காணிக்கைக்குப் **'புள்ளி வரி'** என்றுதான் பெயர். புள்ளியாதற்குரியவர்கள் ஆண்பிள்ளைகளேயாவர். பெண்கள் வெளியூர்கட்கும் வாழ்க்கைப்பட்டுப் போவதற்குரியவர்கள் அல்லவா? எவ்வளவு வளர்ந்த, வயதான ஆண் பிள்ளையாயினும் திரு மணம் ஆகும்வரை **'அரைப் புள்ளி'**தான்; புள்ளிக் கணக்கில் சேர்க்கப்படமாட்டார். திருமணமாகி விட்டாலோ 'அவன் ஒரு புள்ளியாகிவிட்டான்' என்பர். திருமணமான நாளிலிருந்து அவனும் கோயிலுக்குப் புள்ளிவரி கட்டக் கடமைப்ப வ னாகின்றான். இப்புள்ளி வரியிலிருந்து யாரும் தப் பிக்க முடியாது. ஏழை, பணக்காரன் என்ற வேறுபாடு கிடையாது. பணக்காரன் கோயிலுக்கு வேறு பல நன்கொடைகள் தரலாம், மண்டகப் படிகள் செய்யலாம், உபயங்கள் புரியலாம். அது வேறு செய்தி. அவனும் எல்லோரையும் போல—ஏழரைப்படி பச்சரிசியும் ஐந்தேகால் ரூபா யும் என்று அவ்வூரில் விதித்திருந்தால், அதன்படி புள்ளி வரி கட்டிவிட வேண்டும். அதுபோல, எவ் வளவு ஏழ்மை வந்தாலும் 'புள்ளி வரி' மட்டும் இல்லை என்று சொல்ல முடியாது. ஓராண்டு கட் டத் தவறினால் பிறகு வட்டியோடு கட்ட வேண்டும். 'புள்ளி வரி' கட்டத் தவறுவது கடுமையான குற்றமாகக் கருதப்பட்டு வந்தது. எத்தகைய ஏழையாயினும் தமது உடைமையை விற்றுவது புள்ளி வரி கட்டிவிடுவர். தம் வறுமையைவிடக் கோயில் வரி கட்டாமையையே அவமானமாகக் கருதி வந்துள்ளனர். தம் ஊரில் தங்க இயலாமல், வேலை காரணமாகவோ, தொழில் துறை காரணமாகவோ வெளியூர்களி லேயே தங்க நேர்ந்தாலும் அல்லது தொலைதூர நாடுகட்குச் செல்ல நேர்ந்தாலும் தம்மூர் நகரக் கோயில்களுக்குப் புள்ளி வரி கட்ட யாரும் தவறுவ தில்லை. தம் உறவினர் மூலமாகவேனும் சொல்லியனுப்பிக் கட்டிவிடுவர். அண்மைக் காலம்வரை இந்நடைமுறைகள் தவறாமல் பின் பற்றப்பட்டு வந்துள்ளன. ஒருவர் 'வரிப்பாக்கி' உடையவராயிருந்து, திடீரென இறந்து போனால் கோயில் வரியை முற்றிலும் அல்லது கணிசமான அளவு வசூலித்த பிறகல்லது அவரது ஈமச் சடங்கு களில் நகரத்தார் கலந்துகொள்வதில்லை. ஒருவர் கட்டாத வரிப்பாக்கியனைத்தும் அவர் பெயரால் பற்றெழுதப்பட்டு வட்டியுடன் வளர்ந்துகொண்டே வருகிறது. அவர் தவறினாலும் அவரின் வழி முறையினர் இதிலிருந்து தப்ப முடியாது. இறுதி வரை கட்டியேயாக வேண்டும். நகரத்தார்களின் வாழ்வில் எத்தகைய 'மையமான', 'உயிர் நிலையான' இடத்தை இக்கோயில்கள் பெறுகின்றன என்பதற்கு மேலும் சில வாழ்க்கை நடைமுறைகளை இங்குச் சுட்டிக் காட்டுதல் வேண் டும். அப்போதுதான் இக்கோயில்களின் இன்றி யமையா இடம் இன்னும் தெளிவாக விளங்கும்.

நகரத்தார்கள் அனைவரும் சமயச் சார்பால் 'சிவநெறிச்' செல்வர்களேயாவர். ஆயினும், திரு மால் வழிபாட்டையும் தம் சிவ நெறியின் உட் பகுதியாகவே கொண்டனர் என்று தெரிகிறது. சிற்றூர்தோறும் உள்ள நகரக் கோயில்கள் எல்லாம் சிவன் கோயிலாகவே இருப்பதில்லை.

இவை முருகன் கோயில்களாகவும் சில ஊர்களில் விளங்கும்; அம்மன் கோயில்களாகவும் சிற்சில ஊர்கட்கு அணி தரும்; பெருமாள் கோயிலாகவும் சில ஊர்கட்குப் பெருமை தரும். இக்கோயில் மணியோசை இவர்கள் வாழ்வில் எதிரொலித்துக் கொண்டேயிருக்கிறது. ஆச்சிமார்கள் இம்மணி யோசை கேட்டதும் 'காலைசந்தி ஆகிவிட்டதே', 'உச்சிக் காலம் வந்துவிட்டதே', 'சாயலிச்சை மணி கேட்கிறதே', 'இது என்ன அர்த்த சாமமா?' — என்று காலத்தைக் கணக்கிட்டுக் கொள்வர். மணமகளுக்கும் இளைஞன் இக் கோயி லிலே சென்று வழிபட்ட பிறகுதான் மண மாலை சூடி மனைவியைக் கைப்பிடிக்கின்றான். ஓரிளைஞன் மாப்பிள்ளையாகிப் புறப்படும்போதும் மனைவியுடன் திரும்பும்போதும் கோயிலைச் சார்ந்த இடங்களில் தங்கியிருந்து, பிறகுதான் வீட்டிற்கு அழைக்கப் பெறுகின்றான். சிற்றூர் முழுவதும் சமய நறுமணத்தைப் பரப்பும் 'பத்தி'யாக இப்பத்தி மிகும் திருக்கோயில்கள் இலங்குகின்றன. ஓங்கியுயர்ந்த கோபுரங்கள் அவ்வூரின் திசை காட்டி, அருட்கை உயர்த்தித் தம் குழந்தைச் செல்வங்களை வரவேற்கும் 'துருவ விண்மீன்' களாகத் துலங்குகின்றன. பிறப்பு முதல் இறப்பு வரை மனித வாழ்வோடு பின்னிப்பிணைந்து கிடக்கும் சமயத்தைப் பிரித்தறிய ஒண்ணுவாறு செய்யும் தொடர்புச் சங்கிலியாய் இக்கோயில்கள் இயங்குகின்றன.

இக்கோயிலின் அன்றுடப் பூசை முதல் ஆண்டுப் பெருவிழா வரை நடைபெறுவதற்குச் சீருடைச் செல்வர்கள் மனங்கனிந்து உதவுவ துண்டு. திருவிழாக்களே தமிழர்கள் கண்ட இன்பப் பொழுதுபோக்கு. சிற்றூர் பல இதனால் 'விழவரு மூதூர்கள்' எனப்பட்டன. நகரத்தார்களைப் பொறுத்தவரை இத்திருவிழாக்கள் உள்ளூர் நகர மக்களை மகிழ்ச்சிக் கடலில் ஆழ்த்துகின்றன, வெளியூர் நகர மக்கள் பலருடன் பழகும் வாய்ப்பைத் தருகின்றன. சுற்றந் தழுவுதல், விருந்துபுறந்தருதல், அறவோர்க்கு அளித்தல், அந்தணர் ஓம்பல் அனைய அறங்கள் நிகழ இத்திரு விழாக்கள் பெருவாய்ப்புத் தருகின்றன.



## போற்றுதற்குரிய பெருமக்கள்

—சொல்லின் செல்வர் டாக்டர் ரா.பி. சேதுப்பிள்ளை

இருமொழிப் புலமை வாய்ந்து, தமிழகம் எங்கும் கலையொளி வீசிய தண்டமிழாசான் பண்டிதமணியைத் தந்த நாடு செட்டிநாடன்றோ? தில்லையம்பதியின் எல்லையில் அண்ணாமலைப் பல்கலைக் கழகம் என்னும் கலைக்கோயில் அமைத்த செட்டி நாட்டரசரது வள்ளன்மை அறிவுலகத் தில் என்றும் அழியாததன்றோ? முத்தமிழ் வளர்த்த மதுரையம்பதியில் சிறந்த கல்லூரிகள் அமைத்துப் பழைய பாண்டியர் போல் கன்னித் தமிழைப் பேணி வளர்க்கும் பெருமை சான்ற அறிஞர் கருமுத்து தியாகராசச் செட்டியாரை அறியாதார் இந்த நாட்டில் உளரோ? செட்டி நாட்டிலுள்ள காரைக்குடியில் சிறந்த கல்லூரிகள் அமைத்துக் கலைவளர்க் கும் அழகப்ப செட்டியாரவர்கள் இந்நாட்டிற்கு ஒரு நல்லணியன்றோ? இன்னும் 'செல்வன் கழலேத்தும் செல்வமே செல்வம்' என்னும் அருள் மொழியின் பொருளுணர்ந்து அறப்பணி ஆற்றும் செட்டிநாட்டுப் பெரு மக்களும் என்றும் போற்றுதலுக்கு உரியரன்றோ?

—'செட்டி நாடும் தமிழும்': சோமலெ

# மங்கையர் இருவர்

**கண. சித்சபேசன்,** எம். ஏ.
*[அதிகாரி, பாங்க் ஆப் மதுரை லிமிடெட், சென்னை]*

**பெ**ரிய புராணமென மக்களால் வழங்கப் பெறும் திருத்தொண்டர் புராணத்துள் குறிக்கப் பெறும் வரலாறுகள் பல. நமது தமிழ்ப் பண் பாட்டிற்கு முரணான புறச் சமயங்கள் புதுமைப் புரட்சிக் கருத்துக்களை வெள்ளமாக வாரிக் குவித் தன. இவ்வெள்ளத்தில் திருநாவுக்கரசர் போன்ற அருளாளர்களும், பல்லவ பாண்டிய மன்னர்களுங் கூட அடித்துச் செல்லப்பட்டனர். ஆயினும் நமது சைவ சமயம் தன்னகத்தடக்கிய சமய உண்மையால் இக்கொடுமைகளை எதிர்த்து வென்றது. இவ்வரலாறு பெரிய புராணத்தில் பரக்கப் பேசப் பெறுகின்றது.

தமிழினம் முழுவதும் ஈடுபட்ட இப்புரட்சிப் போரில் பல தொழிலினர், பல்வேறு நிலையினர், சாதியினர், ஆண் மக்கள், பெண் மக்கள் முதலி யோர் பங்கேற்றனர். அவ்வாறு வாழ்ந்த இரண்டு மங்கையரைக் காண்போம்.

**திலகவதியார் :** திலகவதியார் திருநாவுக் கரசரின் தமக்கையார். சமண சமயத்திற்குச் சென்று, தருமசேனர் எனப் பட்டம் பெற்ற திருநாவுக்கரசரை மீட்டு சைவ சமயத்திற்குத் தந்தவர் இவரே எனலாம். கண்ணிரண்டாகக் குடி விளங்கத் தோன்றியவர்கள் திலகவதியாரும் திருநாவுக்கரசரும்.

திலகவதியார்க்கு மணப்பருவம் வந்தவுடன் கலிப்பகையார் என்பவருக்குத் திருமணம் பேசி நிச்சயித்தார்கள். திருமணம் நிறைவேறு முன்னம் கலிப்பகையார் நாடு காக்கப் போர்க் களம் செல்ல வேண்டியதாயிற்று. போர் பல காலம் நீட்டியமையால் கலிப்பகையார் திரும்ப வில்லை. இதற்கிடையில் திலகவதியாரின் தந்தையார் புகழனார் மூப்பும் நோயும் உற்று இறந்தார். தம் கணவனார் இறந்தமை கேட்டு மாதினியாரும் மண்ணுலகினின்றும் மறைந்தார்.

இளமையிலேயே திலகவதியாருக்கும் திருநாவுக்கரசருக்கும் துன்பம் அடுக்கடுக்காய்ச் சூழ்ந்தது. பெற்றோர் பிரிவால் துயருழந்த இவர் களுக்கு அடுத்து ஓர் இடி இடித்தது. அதாவது, போர்க்களம் புகுந்திருந்த கலிப்பகையார் பகை யொடுக்கிப் போர்க்களத்தை அமர்க்களமாக்கி அமருலகு எய்தினர். அச்செய்தியைக் கேள்வி யுற்ற திலகவதியார் மிகுதியும் வாடினர். தம் பெற்றோர் அவருக்கே தம்மை நிச்சயித்தலின் கணவனார் இறந்ததாகவே கொண்டு, கைம்மைக் கோலம் பூண்டார் திலகவதியார். அவரோடு தாமும் இறக்கத் துணிந்த திலகவதியார் திருவடி யில் திருநாவுக்கரசர் வீழ்ந்து கதறினார். "தமக்கையே, தாய் தந்தையர் மறைந்தாலும் உம்மை வணங்கப் பெற்றதனால் உயிர் வாழ்ந் தேன். நீவிரும் மறைந்தால் நான் உயிர் வாழேன்" எனச்சூளுரைத்த தம்பியைநினைந்து, தம்கழுத்தில் தாலியாகிய அணிபொன் மணிநூல் தாங்காது, அனைத்துயிர்க்கும் உயிர் தாங்கி வாழ்ந்தார் திலக வதியார். பலவிடத்தில் தண்ணீர்ப் பந்தரும் சோலைகளும் குளங்களும் அமைத்து அறஞ்செய் தார்.

இவ்வாறு தூய தொண்டு வாழ்க்கை மேற் கொண்ட திலகவதியார்க்கு மற்றுமொரு துன்பம் தொடர்ந்தது. எந்தத் தம்பிக்காகத் தாம் உயிர் வாழ்ந்தாரோ, அந்தத் தம்பியாகிய திருநாவுக் கரசு திடுமென சமண சமயக் கொள்கைகளில் ஆசை வைத்து அச்சமயம் புகுந்தார். அங்கு தருமசேனர் என்ற பட்டமும் பெற்றார். அச் செய்தி கேட்ட திலகவதியார் முழுவதும்

சிவகாரியமே சிந்தித்துக் கோயிலில் திருமெழுக்கிட்டும், மலர் கொய்து மாலைகள் தொடுத்து அமைத்தும் தினமும் கோயிலில் பழிகிடந்தார். அந்நாளில் எல்லாம் இறைவனை நினைந்து "என்னை நீர் ஆட்கொண்டது உண்மையானால் என் தம்பியைச் சமணமிருந்து காப்பாற்றுக!" எனத் தொழுது வந்தார். அவர் கனவில் இறைவன் தோன்றி, "கவலைப்படாதே, சூலை மடுத்து ஆட்கொள்வோம். முன்னமே முனியாகி எம்மை அடைய அவன் தவம் முயன்றுள்ளான்," என்றார்.

அங்கே, தருமசேனர்க்குச் சிவனருளால் சூலை என்ற கொடிய வயிற்று நோய் வந்தது. பலகால் சமணர்கள் செய்த வைத்தியத்தால் குணம் பெறாத அவர்க்கு, அப்போதுதான் தமக்கையார் நினைவு வந்தது. தூதுவன் ஒருவனை அனுப்பினர். வந்த தூதுவன்பால் செய்தியுணர்ந்த திலகவதியார், "நான் சமணர் பாழிப் பக்கமே பாரேன்," என்றார். தூது ஓடிச் சென்று நாவுக்கரசர்க்கு உரைக்க, அவரே அச்சமயம் விட்டு, இரவோடு இரவாக ஓடி வந்து, திலகவதியார் இருந்த மடத்தை அடைந்து, அவர் திருவடியில் வீழ்ந்தார். தம்மை உய்விக்க வேண்டினர். அவரை நோக்கித் திலகவதியார் "இது சிவனருளே. பற்றறுப்பானாகிய சிவனைப் பணிந்து பணி செய்வீர்" எனத் திருவஞ்செழுத்தை ஓதித் திருநீறளித்தார். வைகறை வந்தவுடன் இருவரும் நீராடினர். திருவலகு, திருமெழுக்கு தோண்டியும் எடுத்துக்கொண்டு தம்பி தம் பின் வரத் திலகவதியார் கோயில் புகுந்து வேண்டினர். திருநாவுக்கரசரும் "கூற்றாயினவாறு" எனத் தொடங்கும் தேவாரத்தைப் பாடி மெய்ப்புளகம் எய்தினர். வயிற்றுநோய் நீங்கி வாழ்வு பெற்றார்.

**திருவெண்காட்டு நங்கை :** இவர் சிறுத்தொண்டர்க்கு மனைவியாக வாய்த்தவர். கணவன் ஈடுபடும் பெரும்பணி முழுதும் வெற்றி பெற மனைவியின் முழு ஒத்துழைப்பு தேவை என வாழ்ந்து நிறுவியவர்.

"தினமும் சிவனடியவர் ஒருவரை உண்பித்தே உண்பேன்" என்னும் நியதி மேற்கொண்டவர் சிறுத்தொண்டர். இவரது பக்திமையைச் சோதிக்க எண்ணினன் செஞ்சடைக் கடவுள். மண்ணுலகில் கபாலி வேடமிட்டு வந்தான். சிறுத்தொண்டர் வாழும் ஊர் அடைந்து, அவரது மனைவினவி வந்து சேர்ந்தான். அன்று ஒரு சிவனடியாரும் கிடைக்காவகை அருள் செய்துவிட்டே வந்து சேர்ந்தான். சிறுத்தொண்டர் வீட்டில் வந்து 'சிறுத்தொண்டர் உளரோ' எனக் கேட்டான். திருவெண்காட்டு நங்கை உடன்போந்து "அடியாரைத் தேடித்தான் போயுள்ளார், அமர்க" என்றார். 'சிவனே, "மங்கையர் இருக்கும் மனை இரோம்" எனச் சொல்லிவிட்டு, "அதோ அங்குள்ள ஆத்தியின்கீழ் இருப்போம், வந்தால் அவனை வரச்சொல்லும்" என்று சொல்லிப் போய்விட்டான்.

சிறுத்தொண்டர் வந்தவுடன் திருவெண்காட்டு நங்கை செய்தி சொல்ல, சிறுத்தொண்டரும் ஓடோடிப் போய்ச் சிவனடியாரைக் கண்டு மீண்டார்.

மீண்டவர் தமது மனைவியை அழைக்கவில்லை. காரணம், மனைவியார் அவர் வரவிற்காக வாசலிலேயே காத்து நின்று, அவரைக் கண்டதும் முகமலர்ந்து, கணவனர் பாதங்களில் விழுந்து வணங்கி, கணவனர் முகநோக்கி, "அடியவர் என் சொன்னர்?" என்று வினவினர்.

சிறுத்தொண்டர் சொன்ன செய்தி மனித உணர்வுகளைக் கலங்கச் செய்வது. அதுவும் மென்மைத் தாய்மைக் குலமாம் பெண் குலத்தை நிலைகுலையச் செய்வது. அவர் சொன்னது இதுவே : "அம்மையே, சிவனடியார் மனமகிழ்ந்து அமுது செய்ய இசைந்தார். குடிக்கொரு மகனாய்ப் பிறந்தவனை, ஐந்து வயதுடையவனாய், உறுப்பில் மறுவில்லாதவனாய் உள்ள சிறுவனைத் தாய் பிடிக்க, தந்தை அரிந்து, இருவரும் மகிழ்ந்து சமைக்கப்பெற்றால் அக்கறியுடன் உண்பர்." சாதாரணப் பெண்ணாயின் மயங்கி வீழ்வாள், கதறுவாள், துடித்துப் போவாள். தாய்மை எய்தியவளாயின் உயிரையே துறப்பாள். இச்செய்தியைக் கேட்ட திருவெண்காட்டம்மை சிறிதும் கலங்கவில்லை. அமைதியாகக் கேட்டார். "எப்படியும் சிவனடியாரை உண்ணச் செய்வோம். ஆனால் குடிக்கு ஒருவனாகி ஐந்து வயதுடைய சிறுவனைப் பெறுவது எவ்வாறு?" என வணங்கிக் கேட்டார். இப்படிக் கேட்டபோதே திருவெண்காட்டம்மை தம் மகனை நினைந்தே கேட்டார். கணவரே சொல்கிறாரா பார்க்கலாம் என நினைந்து கேட்ட இதன் உள்ளார்ந்த கருத்தைச் சிறுத்தொண்டர் உணரவில்லை. அவர் சொன்னர்: "நிறைய நிதி கொடுத்தால் குழந்தை தருவார். ஆனால், தாய் உவந்து பிடிக்க, அரியும் தந்தை எங்கே கிடைப்பர்?" என்றார். கணவனின் கலக்கத்தை உணர்ந்த திருவெண்காட்டம்மை கலக்கத்தைத் தெளிவித்து, வணங்கி, "நாயகரே, என்ன இது! நம்மைக் காக்க நாம் பெற்ற செல்வ மகனாகிய சீராளனைச் சென்று பள்ளியிலிருந்து அழைத்து வாரும்" என்றாள்.

இதுகூட ஓர் உணர்ச்சி உந்துதலில் சொல்லி விட முடியும். ஆனால், மேற்கொண்டு இந்த நங்கை செய்தன யார் செய்வார்!

பள்ளிவிட்டுச் சிறுவன் வந்தான். கிண்கிணிக் கால் ஒலிக்க ஓடிவந்த பிள்ளையை, திங்கள் பத்தும் சுமந்து பெற்ற அன்னையாகிய அவர், சீராட்டிப் பாராட்டிப் பாலூட்டிவளர்த்த மகனை முடி திருத்தி, முகந்துடைத்து, மஞ்சள் பூசி, திருமஞ்சனமாட்டி, கோலம் செய்து கணவனார் கைக் கொடுத்தார். ஆசை மேலூர்ந்தும், "ஐயய்யோ, இறைவன் அடியார் திருவமுதாயிற்றே, எச்சில் படுமே!" எனவஞ்சி உச்சி மோந்து பார்க்கவில்லை. ஊரார் அறிய பிள்ளையைக் கறி சமைத்தால் தடங்கல் செய்வர் என, ஒரு மறைவிடம் நண்ணினர். தந்தையார் மகன் தலையைப் பிடிக்கத் தாயார் கிண்கிணிக் காலிரண்டும் மடியின் புடை இடுக்கிக் கையிரண்டையும் கையால் பிடிக்க, தந்தையார் தலையரிந்தார். கொடுமையிலும் கொடுமை! தந்தை வாள் கொண்டு பிஞ்சு மகன் தலையை வெட்டத் தாய் பிடித்திருந்தாளென்றால் இது உலகியற்குப் பகையன்றோ! 'திருவெண்காட்டு நங்கையே ஓலம்' எனக் கதற வேண்டும் போலுள்ளது. இன்னும் கேளுங்கள்.

தலையரிந்தபின் தந்தை போய்விட்டார். தாயொருத்தியாக, உறுப்பிறைச்சியை வெட்டி, கொத்தி, அறுத்துக் கறிக்கு வேண்டிய மசாலை அரைத்து, அடுப்பில் ஏற்றிச் சமைத்துப் பத மறிந்து இறக்கி, மற்றொரு பாத்திரத்தில் வாசனைப் பொருள்களை இட்டுத் தாளித்துக் கறி ஆக்கினார். பிற கறிகளுமாக்கிச் சோறும் சமைத்துக் கணவர்க்குச் சொன்னார். கவனியுங்கள். ஒருபோதும் தன் மகனென்றே சிந்திக்கவில்லை.

கணவன் சிவனடியாரைக் கொண்டுவரப் போய் விட்டார். திருவெண்காட்டு நங்கை, வீடு விளக்கி, மாலைகள் நாற்றி, ஆசனம் அமைத்து, கரக நீர் எடுத்து ஏந்தினார். திருவெண்காட்டு நங்கை தம் கையாலேயே தம் பிள்ளைக்கறியை இலையில் பரிமாறினார். சிவன் நிபந்தனைப்படி சிறுத் தொண்டரும் ஓரிலை முன்னர் அமர்ந்துண்ணப் போதும்போதுகூட திருவெண்காட்டம்மை கலங்கவில்லை. "ஐயோ, இது நம் குழந்தைக்கறி" என்று ஓலமிடவுமில்லை; சிவனடியாரை உண்பிக்கக் கணவனார் கொண்ட உறுதிப்பாட்டில் ஊறு நிகழுமே என்ற அச்சத்தால்.

இறுதியில் "உங்கள் குழந்தையைப் போயழையும்" எனச் சிவனடியார் ஆணையிடவே, சிறுத் தொண்டர் ஓடிப் போய், வாசலில் நின்று, "மைந்தா! வருவாய்!" என அழைத்தார். அப்போது மகன் வரவில்லை. ஆனால், திருவெண்காட்டு நங்கை "செய்ய மணியே! சீராளா! வாராய், சிவனடியார் உடன் உண்ண அழைக்கின்றார்" என்று ஓலமிட்டவுடன், பள்ளியிலிருந்து ஓடிவரும் பிள்ளை போலவே ஓடி வந்தான் சீராளன்.

இவ்வாறு கணவன் ஈடுபட்ட நற்பணியில் அவனைவிட ஒரு படிமேல் ஈடுபட்ட பெருமை திருவெண்காட்டம்மைக்கு உரியது.



# வள்ளலார் வாழ்க்கை

டாக்டர் ஔவை நடராசன்

தமிழகம் செய்த தவப்பயனுகப் பத்தொன் பதாம் நூற்ருண்டின் இடைப்பகுதியில் தோன்றி, திருவருட் பிரகாச வள்ளலார் என இவ்வுலகினரால் போற்றப்பெற்றவர் இராம லிங்க அடிகளார் ஆவர். கல்லார்க்கும் கற்ற வர்க்கும் களிப்பும், கல்லேயும் உருக்கும் கனி வும் வாய்ந்த திருவருட்பாக்களே அவர் வழங்கியதை நாடு நன்கறியும். 'திருவாசகத் துக்கு உருகார் ஒரு வாசகத்துக்கும் உருகார்' என்ற முதுமொழி போலத் திருவருட்பாவுக்கு உருகாதார் திருவாசகத்துக்கும் உருகார் என்னும் புது மொழியைக் காணும் வகையில், வள்ளற்பெருமான் அருளிச்செய்த ஞானத் தமிழின் நலங்கண்டு வழிபடுவதில் மக்கள் இன்று பெருவிருப்பங்கொண்டிருக்கின்றனர்.

தென்னுர்க்காடு மாவட்டத்தில், சிதம்பரம் வட்டத்தைச் சார்ந்த மருதூரில், இராமையா பிள்ளே சின்னம்மை என்னும் பெற்ருேர்க்கு, நம்பெருமான் ஐந்தாமவராகச் சுபானு ஆண்டு புரட்டாசித் திங்கள் இருபத்தொன்ருவது நாளில் தோன்றியருளியதும், பின்னர்ப் பொன் னேரியில் அருமைத் தமையனுரின் ஆதரவில் வளர்ந்ததும், சென்னேயில் சீருற்றதும், அண்ணியார் அன்பு பாராட்டியதும், திருமுறை விரிவுரை செய்ததும், மணந்ததும், தணந்த தும், அருட்பாக்களேப் புனேந்ததும், தில்லே, கருங்குழி, வடலூரில் வதிந்ததும், சித்திவளா கத்தில் ஞான ஒளியிற் கலந்ததுமான செய்தி களே அனேவரும் அறிவர். இச்செய்திகளே ஒரோ வழி அவர் வாய்மொழியாகவே உணர முடிந்தாலும், அருள் நெறியில் பெம்மான் தலேப்பட்டு, திருவருள் வலைத்தால் சீருற்றுத் திகழ்ந்த நலங்களே முறையாகத் திருவருட் பாவை ஓதி உணர்வோர் அறியலாம் என்பர்.

இளமைதொட்டே, வள்ளலார் வாழ்க்கை அருள்நெறியில் தோய்ந்ததாகும். அவருடைய தூய திருவுள்ளத்தில் திருவருட்பா முழுவதும் பளிங்கெனத் துலங்குகின்றன. பிறந்த ஊர் மருதூராகவும், வளர்ந்த ஊர் சென்னேயாக வும், தாம் சிறந்த ஊர் வடலூராகவும் சித்தி பெற்ற இடம் வளாகமாகவும் அமைந்தா லுங்கூடத் தம்மைச் சிதம்பரம் இராமலிங்கம் என்றே அழைக்குமாறு பெருமான் கைச்சாத் திட்டுள்ளார்கள். எனவே, தில்லேக் காதல் பெருமானுக்குப் பிள்ளேப்பருவத்தேயே பிறங்கலாயிற்று.

> ''தாய்முதலா ரொடுசிறிய பருவத்தில் தில்லேத்
> தலத்திடையே திரைதூக்கத் தரிசித்த போது
> வேய்வகைமேற் காட்டாதே என்றனக்கே
> எல்லாம்
> வெளியாகக் காட்டியவென் மெய்யுறவாம்
> பொருளே''
>
> —அருள்விளக்க மாலே 44

தில்லேத் திருக்கோயிலின் சிதம்பர இரகசியம் பெருமானுக்கு ஐந்து திங்களான

குழவிப் பருவத்திலேயே தெளிவாகப் புலனாயிற்று. அடிகள் ஓராட்டைப் பருவம் நிரம்பாத அவ்விளம் போதிலேயே, 'திரை தூக்கக் கண்ட அனுபவப் பொருளையே' நாற்பத்து எட்டாண்டுகளுக்குப் பின்னர், தமது நாற்பத்தொன்பதாம் அகவையில், உத்தர ஞான சிதம்பரமாகிய வடலூரில் சத்தியஞான சபையில், ஏழு திரை நீக்கி நமக்கு ஒளியாகக் காட்டியருளினர் போலும்!

ஆன்மிக விளக்கமுற்ற சான்றோர் வரலாறு களை நோக்கும்போது, அப்பெருமக்கள் தொடக்கத்தே உலக வாழ்விலும் நோக்கி லும் பொருந்தாதவர் போலக் காணப்படுகின் றனர். 'வாடிய பயிரைக் கண்டு வாடிய வள்ள லார்க்குத் தம் வாழ்க்கைத்துணைவியாரின் வாட்டம் புலனாகாமற் போனதேன், மறி யிளங் குழவிக்கு மறுகி வருந்திய மாமுனி யாகிய புத்தருக்கு மனைவியின் துயரும் மழலையின் நினைப்பும் வாராததேன்' என்றும் சிலர் வினவுதல் கூடும். அரிய குறிக்கோள் ஒன்றையே கருதி முயல்வார்க்குப் பிற உலகியல் எல்லாம் பொருளாகாமற் போயொழியும் என்பதை அறிந்தால், இவ் வினாக்கள் வேண்டாதெனவாக விலக்கப் பெறும்.

பழம்பிழி மதுரப் பாடல்களைப் பல்லாயிரக் கணக்கில் பாடிப் பரவிய வள்ளற்பெருமான், பள்ளிப் படிப்பில் சோர்ந்திருந்தார். அந்த மந்த நிலையைக் கண்ட அண்ணன் மனம் துயருற்றார். 'அவர் அக்கால முறைமைப்படி திவாகரம் முதலிய நிகண்டு, சதகம், அந்தாதி முதலிய நூல்களைத் தம் அருமைத் தம்பியா ருக்கு நாடோறும் வழுவாமல் கற்பிக்கலாயி னர். ஆனால், இராமலிங்கமோ சொல்லி வைத்த பாடங்களைக் கண்ணுங்கருத்துமாகக் கற்பதில்லை. எந்நேரமும் ஏதோ வேறொரு சிந்தையில் ஆழ்ந்து தமையனார் மொழியைச் சிறிதும் நோக்குவதில்லை. சதாசருவதா நினைவு வேறுபட்டிருக்கும் இளையவராகிய இராமலிங்கம் கல்வி கற்கமாட்டாத முழு மகன் என்றும், அவர் ஒரு நாளும் தமது கருத்தை நிறைவேற்றுதிருத்தலின் வழிக்கு வாராத பிள்ளை என்றும் சபாபதிப் பிள்ளை தீர்மானித்துவிட்டார்! அவர் உலகவழிக்கு ஒத்துவராத பிள்ளை என்பது உண்மைதானே! அவர் தன்மையைக் கண்ட சுற்றத்தாரும் அவ்வாறே எண்ணினர் எனப் பேராசிரியர் மணி. திருநாவுக்கரசு முதலியார் தம் ஆசிரியர் கூறியதாகக் குறித்துள்ளார்.

கந்தப்பெருமான் திருக்கோயிலுக்கு நாளும் சென்று, வணக்கப் பாடல்களை வாய் விட்டுப் பாடி நெஞ்சம் உருகுவது அடிகளா ருக்கு இளமையிலேயே வாய்த்தமையால், பள்ளிக் கல்வி கற்கும் கருத்து இல்லாது போயிற்று. நினைந்து நினைந்து, உணர்ந்து உணர்ந்து, நெகிழ்ந்து நெகிழ்ந்து பரம் பொருளை வனைந்து வனைந்து ஏத்துவதும், தேன் படிக்கும் அமுதாகிய திருப்பாட்டைத் தினந்தோறும் தாம் படிப்பதும் அவர் அன்றாடச் செயல்களாயின. நாள் முப்பத் தொன்று கொண்ட திங்கள் சிலவற்றுள் ஒன்றில் தவறாமல் சென்று அவர் கந்த கோட்டத்தை வழிபட்டதாகத் தோன்று கிறது. அதனால் கந்த கோட்டத்தில் பாடி வழிபட்ட தெய்வமணி மாலையில் 31 பாடல்கள் இருக்கின்றன. முப்பத்தாறு தத்துவங்களுள் 31 தத்துவங்களாகிய ஆன்ம தத்துவம், வித்யா தத்துவம் இரண்டும் நீங்கி எப் போதும் சிவ தத்துவத்திலே பெருமான் இருந்தார்கள் என்றும் அதனால் அறிய லாம் என்றும் உரைப்பர். சிவபூசை செய் வோர் இந்நிலையிலிருந்தே வழிபட வேண்டு மெனச் சிவாகம விதி உளதாகவும் கூறு வார்கள்.

தம் பிறப்பே ஒரு குறிக்கோளோடு திரு வருளால் அமைந்தது என்று பெருமான் சுட்டிக் காட்டுகின்றார்.

''பன்னெறிச் சமயங்கள் மதங்கள்என் றிடும்ஓர்
பவநெறி இதுவரை பரவியது இதனால்
செந்நெறி அறிந்திலர் இறந்திறந் துலகோர்
செறிஇருள் அடைந்தனர் ஆதலின் இனிநீ

புன்னெறி தவிர்த்தொரு பொதுநெறி
எனும்வான்
புத்தமு தருள்கின்ற சுத்தசன் மார்க்கத்
தன்னெறி செலுத்துக என்றஎன் அரசே''

''அகத்தே கறுத்துப் புறத்தே வெளுத்திருந்த
உலகர் அனைவரையும்
சகத்தே திருத்திச் சன்மார்க்க சங்கத்
தடைவித் திடஅவரும்
இகத்தே பரத்தைப் பெற்றுமகிழ்ந்
திடுதற் கென்றே எனைஇந்த
உகத்தே இறைவன் வருவிக்க உற்றேன்
அருளைப் பெற்றேனே !''

ஒன்பதாம் ஆண்டுப் பருவத்திலேயே, திருவருள் பெறும் நிலையும், இனிய பாடல் களை இயற்றும் திறமும் அவருக்குக் கைவர லாயின.

''ஆறொரு மூன்றுண் டாவதிலே முன்என்னை
ஆண்டாய்''
'' ஆண்டாறு மூன்றுண்டில் ஆண்டுகொண்ட
அருட்கடலே''
''சிறுபருவத்து என்னையாண்டு நிழற்கருணை
யளித்தாய்''
''தெருவிடத்தே விளையாடித் திரிந்தஎனை
வலிந்தே சிவமாலை அணிந்தனை''
''என்னையறியாப் பருவத்து ஆண்டு கொண்ட
குருவே''
சிறுகால் வீசி ஆடிடச் சென்ற அந்தப்
பருவத்திலே நல்லறிவளித்தே உனைப்பாடிடச்
செய்தாய்''

என்பன காணலாம்.

பன்னிரண்டாம் அகவை முதல், முறை யான ஞான வாழ்வினை அவர் தொடங்கிய தாகத் திரு. ஊரன் அடிகளார் குறித்துள்ளார் கள்.

''பனிரெண் டாண்டு தொடங்கி யிற்றைப்
பகலின் வரையுமே
படியிற் பட்ட பாட்டை நினைக்கின்
மலையுங் கரையுமே''
ஈரா றுண்டு தொடங்கி யிற்றைப்
பகலின் வரையுமே
எளியேன் பட்ட பாட்டை நினைக்கின்
இரும்புங் கரையுமே''

''பன்னிரண் டாண்டு தொடங்கிநான்
இற்றைப்
பகல்வரை அடைந்தவை எல்லாம்
உள்ளிநின் றுரைத்தால் உலப்புறு ததனால்
ஒருசில உரைத்தனன்.''

என்பது சான்றாகும்.

வள்ளற்பிரான் அறிவு சிறிது விளக்கமுற்ற சிற்றிளம் பருவத்திலேயே உலகம் தம்மை இழுக்காதபடி அருளால் ஈர்க்கப்பெற்றுத் திருவடி நிழலில் சார்ந்து, வேறொன்றிலும் பற்றின்றி உய்திபெற்ற செய்தியைப் பிள்ளைப் பெருவிண்ணப்பத்தில் பல பாக்களில் அடி களார் வெளியிட்டுள்ளார்கள்.

புகழ், பொருள், குலம், நலம், அதிகாரம், அரசு முதலியவற்றை வேண்டாது, உடல் நலமும் உயிர்க்கு இன்பமும் தோற்றும் எப் பொருளையும் விரும்பாது, உரிமைத் தெய்வ மும் குருவும் மெய்ப்பொருளும், நற்றாயும் தந்தையும், இன்பும் நேயமும் இறைவனே என்று பற்றறத்துறந்த முற்றிய நிலையை அடி களார் எய்தலானார்.

உயர்ந்ததாகிய உள்ளத்துறவு மேற் கொண்டிருந்த அடிகளார் புறத்தே வெண் துகிலையே மெய்ம்முழுதும் போர்த்தும், தொங்குதலும் வீசுதலுமின்றிக் கைகளைக் கட்டிக்கொண்டு வணக்கம் காட்டும் ஐந்தனுள் ஒரு நிலையைக் கடைப்பிடித்தும் ஒழுகினார்.

'.மெய்யுறக் காட்ட வெருவி வெண்துகி லாலே
மெய்யெல்லாம் ஐயகோ மறைத்தேன்''

'கையுற வீசி நடப்பதை நாணிக்
கைகளைக் கட்டியே நடந்தேன்.'

வள்ளற்பெருமான் பன்னிரண்டாம் அகவை தொடங்கி தம் வாழ்வில் இருபத்துமூன்று ஆண்டுக்காலம் ஒற்றியூர்ப் பெருமானை வழி பட்டு வந்தார்கள். திருவொற்றியூர்த் திருக் கோயிற்குத் திருவலகிடவும் திருவிளக்கிட வும் திருமெழுக்கிடவும் திருப்பணி செய்யவும் ''உடன் வருதி என் மனனே'' என்று நெஞ்சு அறைகூவலில் தம் விருப்பத்தைக் கூறுகின் றார்கள். ஒற்றியூர்ப் பூங்கோயிலில் திரு

வாசகம் ஓதி உருகும் வழக்கத்தையும் அடிகளார் கொண்டிருந்தார்கள்.

ஒற்றியூரை விட்டுத் தில்லையைப் பற்றிடும் விருப்பம் பெருமானுக்குப் பெருகலாயிற்று.

"என்னைப் புணரும்இடம்
தெற்றி மணிக்கால் விளங்குதில்லைச்
சிற்றம் பலமோ அன்றிஇந்த
ஒற்றி நகரோ சோதிடம்பார்த்து
உரைப்பீர்"

— சோதிடம் நாடல்

"ஒற்றியை அடுத்தே நிற்பதா, இல்லை, தில்லையை நோக்கியே நடப்பதா, அறிந் திலேன் சிவனே! செய்வது என்ன?" எனவும் வினவுகின்றார்.

இடையிட்ட இக்காலத்தேதான் "தொட்ட வன் அன்றிக் கலப்பிலேன்" என்று குறிக் கும், வாழ்வுக்குப் பொருந்தாத் திருமணம் அவருக்கு நிகழ்ந்தது. இதில் "அருவருப்புப் பால்உணும் காலையே உளதா"யிற்றும்.

கந்த கோட்டத்தையும் திருத்தணிகையை யும், திருவொற்றியூரையும் பாடிப் பரவிய இக் காலத்தே அடிகளார் சென்னையில் தமக்கிருந்த இலக்கியப் பயிற்சியால் புலவராகப் பல பணி களை ஆற்றினார்கள். பாடஞ்சொல்லல், ஐயந் தெளிவித்தல், நூல்களைப் பதித்தல், உரை வரைதல், சாற்றுக்கவி வழங்குதல், தல வழிபாடுகள் முதலிய பணிகள் நடந்தன.

'தேட்டிலே மிகுந்த சென்னையில் இருந்தால் சிந்தை சிறுகுறும்' என்று, தமது முப்பத்தைந் தாம் வயதில் சென்னையினின்றும் நீங்கி, வழி யிடையிட்ட தலங்களை வழிபட்டுத் தில்லையை அடைந்தார்கள்.

திருவேங்கட ரெட்டியாரின் விருப்பத்திற்கு இணங்கப் பெருமான் கருங்குழியிலேயே சில காலம் உறைந்தார்கள். கருங்குழியில் இருந்தபோதே திருமுதுகுன்றம், திருவதிகை வழிபாடும் பின்னர் நெல்லிக்குப்பம் கடலூரில் தனித்துறைதலுமாகச் சிற்சில ஆண்டுகள் சென்றன.

"பற்றிய பற்றனைத்தினையும் பற்றற விட்டு அருள் அம்பலப்பற்றே பற்றுமினோ" என்னும் அடிகள் திருவாக்கிற்கிணங்கத் தில்லை யில் வள்ளற்பெருமான் தாம் பெற்ற அருளனுபவங்களைப் பலவாறாகக் குறித்துள் ளார்.

தில்லையில் திருச்சிற்றம்பலம் ஓங்குகின்ற திருமூலட்டானமென இப்பொழுது வழங்கும் பெரும்பற்றப்புலியூரை "உருவளர் மறையும் ஆகமக் கலையும் உரைத்தவாறு இயல்பெறப் புதுக்கி, மருவளர் மலரின் விளக்கி நின்மேனி வண்ணம் கண்டு களித்திடவும் இச்சைகாண்" என்று உரைப்பதால், அடிகளுக்குச் சிற் சபையைப் புதுக்க வேண்டிய குறிப்பிருந்த தென அறியலாம். வடலூரையே உத்தர ஞான சிதம்பரமாக்கி ஞான சபை நிறுவியதால் அவ்வெண்ணமே இவ்வாறு முடிந்தது எனக் கருதலாம்.

கற்பனைக் களஞ்சியமாகிய சிவப்பிரகாசர் தல வெண்பாவை வழங்கியதுபோல் விண்ணப் பக் கலிவெண்பாவைப் பாடிய வள்ளலார், நால்வர் நான்மணியைப் போலவே உருக்க மாக நான்கு தனி மாலைகளைப் பாடி, நால்வர் நன்னெறியை நினைந்து நயந்து போற்று கின்றார்கள்.

இக்காலத்திலேயே அடிகளார் சமரச சுத்த சன்மார்க்கம் என்ற ஒரு நெறியை உபதேசித் தார்கள். இச்சன்மார்க்க நெறியைப் பரப்பவே சங்கம், சாலை, சபை என்ற நிறுவனங்கள் உருவாயின. சன்மார்க்க நெறிக்கு அடிப் படையாய கொள்கை, உயிரிரக்கமாகும். இரக்கமும் உருக்கமுமே பெருமானுடைய வடிவாயிற்று எனலாம்.

ஒரு தெய்வ வணக்கத்தை மறந்து, சிறு தெய்வம் என்று பல பெயர் நாட்டி உயிர்ப் பலி தந்ததைப் பெருமான் கடிந்து நெஞ்சம் பதறுகின்றார்கள். வலைகளைத் தூண்டில்களைக் கண்ணி வகைகளைக் கண்டபோதெல்லாம் உள்ளம் நடுங்கினார்கள். இப்பெருமான், பசி யினால் இளைத்து வீடுதோறும் இரந்து பசி யறாது அயர்ந்த வெற்றரைக் கண்டு பதைத்து உருகினார்கள்.

"பசியினால் வருந்துகின்றவர்கள் எந்தத் தேசத்தாராயினும் எந்தச் சமயத்தாராயினும், அவர்கள் தேச ஒழுக்கம், சமயவொழுக்கம், சாதியொழுக்கம், செய்வகையொழுக்கம் முதலானவைகளை விசாரியாமல் எல்லாச் சீவர் களிடத்தும் கடவுள் விளக்கம் பொதுவாய் விளங்குவதை அறிந்து, பொதுவாகப் பார்த்து, அவரவர் ஒழுக்கத்திற்குத் தக்கபடி அவர்கள் பசியை நிவர்த்தி செய்விப்பதே சீவ காருண்யம் என்பது பெருமான் திருவாக் காகும்.

புலை, கொலை இரண்டும் ஒருவிய நெறியில் உலகு நடைபெறல் வேண்டும் என்பதே சன் மார்க்கத்தின் அடித்தளமாகும். சாதி சமயம் முதலியவற்றால் வேறுபாடுகாணலாகாது எனக் கூறிய வள்ளலார், புலால் உணவொழுக்கம் கருதி மக்களை இரு இனத்தவராகப் பிரித்தார். புலாலுண்ணும் கருத்துடையவன் எந்த வகை யில் சிறந்தாலும் அவனை ஞானி எனக் கூற இயலாது என்று சிவனாணையிட்டு வற்புறுத் தினார். சுத்த சன்மார்க்கத்தின் முக்கிய தடை கள் சாதி சமய வேறுபாடுகள் என்றும், ஆன்ம நேய ஒருமையும் உரிமையும் சன்மார்க்கத் தின் அடிப்படை எனவும் காட்டினார்.

'சமயச் சந்தடி, கோத்திரச் சண்டை, சாத்திரக்குப்பை, இருட்சாதி, மருட்சாதி, நால்வருண ஆசிரமம், ஆசாரம்-இவை பிள்ளை விளையாட்டு! வேதாகமங்கள் சூதாகச் சொன்னவை! சாத்திரங்கள் எல்லாம் தடு மாற்றம்! இந்திரசாலங்கள் வருணாச்சிரமம் எனும் மயக்கம்' எனும் தொடர்கள் அவருடைய சீர்திருத்தச் செம்மையைக் காட்டவல்லன. சபாபதி சிவாசாரியார் தமது பூணூலையும், சிகையையும் நீக்கிவிட்டு அனை வருடனும் சமமாகப் பழகி, ஒரே பந்தியில் உண்டுவந்தார். இவ்வாறு அடிகள் சாதிக் காட்டை அழித்து சன்மார்க்கப் பயிர் வளர்த்த திறம் நாம் கருதிப் பின்பற்றத்தக்கதாகும்.

சாலை, சங்கம் நிறுவிய பெருமான், வடலூரை ஒட்டிய மேட்டுக்குப்பத்துச் சென்று உறையத் தொடங்கினார்கள். மேட்டுக்குப்பத்தில் வைகிய போது தம் உடலைப் பிறர்க்குத் தோற்றுவண்ணம் மறைக்கும் அருள் நிலை யில் இருப்பதுண்டாம். சங்கம் நிறுவியபோதே சங்கம்சார் திருக்கோயிலையும் நிறுவ நினைத் தார்கள். ஒளிவடிவே கடவுள் என உணர்ந்து ஒளி வழிபாட்டிற்கென ஞான சபை உருவாக்கப் பெற்றது. அகத்திலேயே புறக்காட்சியைக் காணலாம் எனும் அடிப்படையில் ஞானசபை உருவாயிற்று. மரணமில்லாப் பெருவாழ்வு, விண்ணப்பங்களில் விதித்த விதிமுறைகள் முதலியன அடிகளாரின் சீடருக்குக் குழப்பமாய் இருந்தமையால் ஞான சபையைச் சில காலம் மூடவும் நேர்ந்தது.

*1873*-ஆம் ஆண்டில், ஐப்பசித் திங்களில் அடிகள் சித்திவளாகத்தில் கொடி கட்டிப் பேருபதேசத்தை நிகழ்த்தினார்கள். அடுத்த கார்த்திகைத் திங்களில் திருவிளக்கை வெளியே வைத்து, அதனை வழிபட்டு வருமாறு அன்பர்களுக்கு அருளினார்கள். ஞானசபை பூட்டப்பெற்றிருந்ததால் இத்திரு விளக்கையே அருட்பெருஞ்சோதியெனவும், தனிப்பெருங்கருணையுருவெனவும் அன்பர் கள் வழிபட்டு வந்தனர். பிறகு, தைத்திங்கள் *13*-ஆம் நாள் (*30-1-1874* ஆம் நாள்) வெள்ளிக்கிழமை பூசத்தன்று நள்ளிரவில் "இதுகாறும் நாம் உரைத்து வந்த உப தேசங்களின்படி ஒழுகி அருட்பெருஞ்சோதி ஆண்டவரை வழிபட்டு உய்க" என்று அறிவுரையும் வாழ்த்தும் கூறி, திருக்கதவைத் திருக்காப்பிட்டுக்கொண்டார்கள்.

இதுகாறும் கூறியவாற்றால் வள்ளற்பெருமா னுடைய வாழ்க்கை அருள்நெறியின் விளக்க மாக அமைந்து சிறந்ததை அறியலாம். உயிரிரக்கமே கடவுள் உணர்வுக்கு உரிய பெருந்திறவுகோல் என்பதே வள்ளலாரின் வாழ்க்கையாக மலர்ந்து மணம் வீசியது.

> "இரக்கம் உயிர்பால்! இயல்பாய் உருகும்
> உருக்கம் இறைவனொரு வன்பால்-பெருக்கும்
> உடைமைபொதுமை உலகொருமை போற்றல்
> வடலூர்க்குச் செல்லும் வழி."

உ

நெற்குப்பையில்

**ராம. சா. சாத்தப்ப செட்டியார் போர்டு உயர்நிலைப்பள்ளி**
**என்ற பெயரால் உயர்நிலைப்பள்ளி ஒன்றை நிறுவிய**

**ராம. சா. குடும்பத்தினருக்கு**

*[ராம. சா. தரும மடத்தினர்]*

**நெற்குப்பை நகரத்தார் சார்பில் நடைபெற்ற**
**பாராட்டு விழாவின்போது வழங்கப்பெற்ற**

# பாராட்டு நல்லுரை

**கண்ணெனத் தகும் அருங்கல்வியை யாவரும்**
**நண்ணிட உயர்நிலைப் பள்ளியை நிறுவினீர்!**

**தங்கள் குடும்பத்தினர் நல்லறம் வாழ்க ! புகழ் ஓங்குக !!**

காலத்தாலும் நல்லோர் கருத்தாலும் சிறந்ததென மதிக்கப்பெறும் சீரிய அறமான கல்வித் தருமத்தைச் சிறக்கச்செய்த நல்லோராகிய தங்கள் குடும்பத்தினரைப் பாராட்டுவதில் நாங்கள் பெருமைப்படுகின்றோம் ; பெருங்களி கொள்கின்றோம். கேடில் விழுச்செல்வம் கல்வி என்பதோர்ந்து, அக்கல்வி மக்கள் அனைவரும் பெற்று மகிழ்ந்திடச் செய்தலே "செல்வந்தான் பெற்றத்தால் பெற்பயன"ெனக் கருதி மாண்புக்குரிய தங்கள் குடும்பத்தினர் செய்துள்ள இத் தருமம் செயற்கரியது ; உயர்வுடையது ; உலகோர் புகழ்வது என்று கூறி நாங்கள் இறும்பூதெய்துகின்றோம்.

பொற்குவை மலிந்து புகழ் மிகுந்தோங்கும் நெற்குப்பை எனும் இந் நகரில் யாரும் இதுகாறும் செய்தற்கெண்ணாத—எக்காலும் நிலையான தொன்றான இவ் உயர்நிலைப்பள்ளியை நிறுவக் காரணமாக இருந்த தங்கள் குடும்பத்தினரைப் பல்லாண்டு வாழ்த்துவோம் ; பலகாலும் போற்றுவோம்.

தங்கள் குடும்பத்தைச்சார்ந்த சீரியோர் திரு. சாத்தப்ப செட்டியார் அவர்களால் பல்லாண்டுகளுக்கு முன்னர் தோற்றுவிக்கப்பெற்றுப் போற்றுதற்கரிய பல நற்பணிகள் ஆற்றிவரும் தரும மடத்தை இந் நாடும் மக்களும் நன்கு அறிவர். பரம்பரையாகவே அறக்கதிர் வளர்க்கும் சிறப்புடைய தங்கள் குடும்பத்தினர் அம் மடத்தின் சார்பாக இப் பெருந் தருமத்தையும் ஆற்ற முன்வந்திருப்பது, தங்கள் குடும்பத்தினரின் சான்றாண்மையைச் சிறப்பித்துக் காட்டுவதாகும்.

இக்குடும்பத்தைச் சார்ந்த திருமதி. சா. பழ. மு. சா. நாச்சம்மை ஆச்சியவர்கள் இப் பெரும் பணிக்கு ஆக்கமளிக்கும் பேரார்வம் தூண்ட துணிவுடன் முன் வந்து ஓர் பெருந் தொகையை முன் பணமாக அளித்தமையே இச் சிறந்த தருமம் உருவாக "வித்தாய்" அமைந்ததென்பதை மகிழ்வுடன் கூற விரும்புகின்றோம்.

... ... ... ... ... ... ... ...

அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்
ஆல யம்பதி னாயிரம் நாட்டல்
பின்ன ருள்ள தருமங்கள் யாவும்
பெயர்வி ளங்கி ஒளிர நிறுத்தல்
அன்ன யாவினும் புண்ணியம் கோடி
ஆங்கோ ரேழைக் கெழுத்தறி வித்தல்

என்ற பாரதியின் பொன்னுரைக்கேற்ப, வாழ்த்துக்குரிய—போற்றுதலுக்குரிய இச்சிறந்த தருமத்தை, தங்கள் குடும்பத்தினருக்கு உங்கட்குப் பேராதரவாக இப்பகுதிப் பெருமக்களும் பொன்னெனப் போற்றிக் கண்ணெனக் காத்து வளர்க்கவும் இவ் அறத்திற்கு ஆதியாய் நின்ற தங்கள் குடும்பத்தினருக்கு எல்லா நலன்களும் இயையவும் எல்லாம் வல்ல இறைவனைப் பல்லாற்றானும் வேண்டுகின்றோம்.

நெற்குப்பை,
துன்முகி, ஆனி, 16,
29-6-56.

இங்ஙனம்,
தங்கள்பால் அன்பு மறவாத,
**நகரத்தார்.**

## நெற்குப்பை
## ராம. சா. குடும்பமும்
## சாத்தப்பா (அரசினர்)
## உயர்நிலைப் பள்ளியும்.

K. R. இராமஸ்வாமி, B.A., B.T.,
முன்னாள் தலைமையாசிரியர் (1957 - 1964).

இற்றைக்கு நூறு வருடங்களுக்கு முன், ஈசுவர ஆண்டு, சித்திரைத்திங்கள் 23-ஆம் நாளில் (4-5-1877) சிறந்ததோர் நல்வேளையில், நெற்குப்பை உயர்திரு. ராம. சாத்தப்ப செட்டியாரவர்களால், அன்னாரது தரும சிந்தனையாலும், தன்னலமற்ற தியாகத்தாலும், பெருநோக்காலும் உந்தப்பட்டுத் தோற்றுவிக்கப்பெற்ற ராம. சா. அறஸ்தாபனம், வரும் 5-5-77-இல் நூற்றாண்டு விழாக் காண்கிறது என்பதையறியப் பெருமிதமடைகிறேன், மகிழ்ச்சியடைகிறேன்.

மாண்புமிகு ராம. சா. அவர்களின் சந்ததியார், அன்னாருடைய விருப்பத்திற்கும், நோக்கங்களுக்கும் இணங்க அறச்செயல்கள் பல தொடர்ந்து செய்து வருவது மிகவும் போற்றுதற்குரியது. ஈண்டு அக்குடும்பத்தாரின் சேவைகள் சிலவற்றைக் குறிப்பிடுவது சாலப் பொருந்துமெனக் கருதுகிறேன்.

நெற்குப்பையில் சிறந்ததோர் நந்தவனத்தை நிறுவி, அதைச் செவ்வனே பராமரித்து உள்ளூர் திரு. சுப்பிரமணிய ஸ்வாமி திருக்கோயிலுக்குப் புஷ்ப கைங்கரியம் செய்து வருவதும், ஆண்டுதோறும் நவராத்திரிப் பெருவிழாவின் போது மேற்படி சுப்பிரமணியர் ஆலயத்தில் சிறந்த நவராத்திரி கொலு அலங்காரம், ஆராதனை, பக்தர்களுக்குப் பெருமளவில் விநியோகம் செய்து வருவது போன்றவையும் குறிப்பிடத்தக்கவை. தவிரவும் ஆண்டுதோறும் விஜயதசமி தினத்தில் நடத்திவரும் சுவாமி புறப்பாடும், விசேடக் கச்சேரி நிகழ்ச்சிகளும் எல்லோராலும் வெகுவாகப் போற்றப்படுகின்றன.

"அன்ன சத்திரம் ஆயிரம் வைத்தல்
ஆல யம்பதி னாயிரம் நாட்டல்
அன்ன யாவினும் புண்ணியங் கோடி
ஆங்கோ ரேழைக் கெழுத்தறி வித்தல்"

என்ற பாரதியாரின் வாக்கிற்கிணங்க ராம. சா. குடும்பத்தார் எல்லா வித அறங்களிலும் விருப்பத்தோடு ஈடுபட்டிருப்பதோடு தருமங்களில் சிறந்தது கல்வியறம் என்பதை நன்குணர்ந்து, அதன் சின்னமாகச் சாத்தப்பா (அரசினர்) உயர்நிலைப் பள்ளியாகிய கலைக்கோயிலை நிறுவி, தம் குடும்பத்துக்கு அழியாப் புகழைத் தேடிக்கொண்டிருக்கின்றனர் என்பதை மகிழ்ச்சியுடன் கூறிக் கொள்ளுகிறேன்.

உயர்தரக் கல்வியை நாடெங்கும் பரப்பவேண்டுமென்ற அரசாங்கத்தாரின் கொள்கைக்கிணங்கவும், நெற்குப்பை, மற்றும் அதைச் சூழ்ந்துள்ள சிற்றூர்கள் பலவற்றிலுமுள்ள சிறுவர்களுக்குக் கல்வியைப் புகட்டவும், அச்சமயம் இராமநாதபுர மாவட்டக் கழகத் துணைத் தலைவராக இருந்த திரு. லெ. ராம. லெ. இராமநாதன் செட்டியாரவர்களுக்கிருந்த செல்வாக்கைப் பயன்படுத்திக் கொண்டு, நமது ராம. சா. குடும்பத்தாரால் 11-6-1956-இல் சாத்தப்பா (கழக) உயர்நிலைப் பள்ளி 1 முதல் 4 படிவங்களுடன் ராம சா. மடத்துக் கட்டடத்தில் நிறுவப்பட்டது.

இக்குடும்பத்தைச் சேர்ந்த திருமதி நாச்சம்மை ஆச்சி அவர்கள், இக்காரியத்திற்கு முன்னின்று தன்னலங்கருதாது, மனநிறைவுடன் ரூ. 8250/- நன்கொடையாகக் கொடுத்தார்கள் என்பது

என்றும் நினைந்து போற்றற்குரியது. தொடக்கத்தில் சுமார் ரூ. 8000/- பெறுமான மேஜைகள், நாற்காலிகள், பெஞ்சுகள், புத்தகங்கள் போன்ற தளவாடங்களை இக்குடும்பத்தார் இப்பள்ளிக்கு மனமுவந்து அளித்துள்ளார்கள். 18-6-1956-இல் இவ்வூர் திரு. லெ.ப. கரு. இராமநாதன் செட்டியாரவர்கள் தலைமையில், அப்போதைய மாவட்டக் கழகத் தலைவர் திரு. சி. இராமஸ்வாமி நாயுடு, M.A., B.L., M.L.A. அவர்கள் ஆசியுடன் துவக்கி வைக்கத் திறப்பு விழா இனிது நிறைவேறியது. 18-2-57-இல், பூதான யக்ஞத் தலைவர் திரு. வினோபா அவர்கள் இப்பள்ளிக்கு விஜயம் செய்தார்கள்.

26-6-1957-இல் அப்பொழுது தலைமையாசிரியராக இருந்த திரு V. பால் மனோகரன் அவர்களிடமிருந்து நான் தலைமைப் பொறுப்பையேற்று 9-6-64 வரை இப்பள்ளியில் பணிபுரியும் பெரும் பேற்றைப் பெற்றேன். இவ்வேழாண்டுக் காலத்தை எனது வாழ்க்கையின் பொற்காலமாகவே கருதுகிறேன்.

1957-ஆம் ஆண்டு அக்டோபர்த் திங்களில் ராம.சா. குடும்பத்தாரின் பொருளுதவியாலும் முழு ஆதரவாலும், கிழக்கு இராமநாதபுர மாவட்டக்கழக உயர்நிலைப்பள்ளித் தலைமையாசிரியர்கள் மகாநாடும், அதைத் தொடர்ந்து இராமநாதபுர மாவட்டத்தில் 50 உயர்நிலைப்பள்ளிகள் நிறுவப்பட்டதைக் குறிக்கப் பொன்விழாவும், இப்பள்ளியில் சிறப்பாக நடைபெற்றன. 19-4-1961-இல் இப்பள்ளி, இப்பொழுதுள்ள புதிய கட்டடத்திற்கு மாற்றப்பட்டது. ராம. சா. குடும்பத்தார் நன்கொடையாக அளித்த சுமார் 7 ஏக்கர் விஸ்தீரணமுள்ள இடத்தில் இக்கட்டடம் கட்டப்பட்டது. இதையெழுப்ப அரசாங்கத்தின் உதவி ஓரளவே கிடைத்திருந்தும், இதைத் தம் சொந்த ஸ்தாபனமாகக் கருதி நமது ராம. சா. குடும்பத்தார் தம் நேரடி மேற்பார்வையில் ஏராளமான அதிகப் பணச் செலவில் அதிகப்படியான வசதிகளுடன் இப்பிரதான கட்டடத்தை எழுப்பிக் கொடுத்ததுடன் பல துணைக் கட்டடங்களையும் முடித்துக் கொடுத்துள்ளனர்.

இன்று இப்பள்ளி இந்த மாவட்டத்திலேயே சிறந்த பள்ளிகளில் ஒன்றாகத் திகழ்கிறது என்பதிலிருந்து ராம. சா. குடும்பத்தாரின் நல்லெண்ணம் நன்கு புலனாகும். விளையாட்டுத் துறையிலும் இப்பள்ளி சாதனை புரிந்திருக்கிறது. 1961-ஆம் ஆண்டில் பூப்பந்தாட்டப் போட்டியில் மாவட்ட அளவிலும், பின் டிவிடின் அளவிலும் முதலிடம் பெற்று ராஜ்ய அளவில் கலந்து கொள்ளும் வாய்ப்பினைப் பெற்றது. ராம. சா. குடும்பத்தாரின் ஆசியால் 28-8-1961 முதல் இப்பள்ளியில் ஏழை மாணவர்களுக்கு மதிய உணவு அளிக்கப்பட்டு வருகிறது. முதன் முதலில் ஏழை மாணவர்களுக்கு இலவச மதிய உணவு வழங்கிய ஒரே உயர்நிலைப்பள்ளி இதுதான் என்பதைக் குறிப்பிட விரும்புகிறேன். 1963-ஆம் ஆண்டுப் பள்ளியிறுதித் தேர்வில் (S.S.L.C.) இம்மாவட்டக் கழகப் பள்ளிகளிலேயே இப்பள்ளி இரண்டாவது இடம் பெற்று வெள்ளிக் கோப்பையைப் பரிசாகப் பெற்றுள்ளது. இப்பள்ளியின் பழைய மாணவர்களில் பலர், பொறியல் வல்லுநர்களாகவும் மருத்துவ நிபுணர்களாகவும் பேராசிரியர்களாகவும் உள்ளனர் என்பது பெருமைப்படத்தக்கதாகும்.

ராம. சா. குடும்பத்தார் எல்லோரும், வயதில் பெரியோரும், இளையோரும், இப்பள்ளியில் பணி புரிந்த, புரிந்துவரும் ஆசிரியர்கள் அலுவலர்கள் எல்லோருடனும் அன்பாகப் பழகும் முறை யாவரும் அக்குடும்பத்தாருடன் ஒன்றிவிட்ட உணர்ச்சியை அளித்து வருகிறது. இப்பள்ளி அரசாங்கத்தாரின் நிர்வாகத்திலிருந்த போதிலும், இதைத் தம் சொந்தப் பள்ளியாகவே கருதி, இதன் முன்னேற்றத்திற்கும் இதில் நடக்கும் ஆண்டு விழா, விளையாட்டு விழா போன்ற விழாக்களுக்கும் தாராளமாகப் பொருளுதவி செய்து வந்ததோடு எல்லோரும் நேரில் கலந்துகொண்டு சிறப்பித்து வந்தது குறிப்பிடத்தக்க அம்சமாகும்.

இந்த நூற்றாண்டு விழா மலரில் பங்குகொள்ள எனக்கு ஒரு வாய்ப்பினைக் கொடுத்துக் கௌரவித்த ராம. சா. குடும்பத்தாருக்கு எனது மனப்பூர்வமான நன்றியைத் தெரிவித்துக்கொள்ளுகிறேன். ராம. சா. சந்ததியார்கள் சகல சௌபாக்கியங்களையும் பெற்று, இன்று போல் என்றும் அறம் பல தொடர்ந்து செய்துவர அருளுமாறு எல்லாம் வல்ல இறைவனைப் பிரார்த்திக்கிறேன்.

வாழ்க சாத்தப்பா அறம்! வளர்க சாத்தப்பா உயர்பள்ளி !! ஓங்குக ராம. சா. குடும்பத்தாரின் புகழ் !!!

# நகரத்தார் தொழில் வித்தகர்களாக...

பெரி. முத்துராமன்

தொழில் வித்தகர் என்பவர் ஒரு தொழிலதிப ருக்குச் சற்று மேம்பட்டவர். தொழில் வித்தகர் கள் நாட்டின் பொருளாதார முன்னேற்றத்துக்குப் பெரிதும் இன்றியமையாதவர்களாவர். தொழில் வித்தகர்கள் எல்லாக் காலங்களிலும் எல்லாச் சமூகங்களிலும் காணப்பட்டாலும் நாட்டுச் சராசரிக்கும் மேலாக நகரத்தாரில் பலர் தொழில் வித்தகர்களாக இருந்து வருவது கண்கூடு.

இல்லாவிட்டால், ஒரு காலத்தில் பர்மாவின் பெரும்பாலான விவசாய நிலத்தை நகரத்தார் தங்களின்கீழ்க் கொண்டுவந்திருக்க முடியுமா? அல்லது மலேசியா, சிங்கப்பூர் பொருளாதாரத் துக்குத் தோள் கொடுத்துத்தான் நின்றிருக்க முடியுமா? அல்லது, போக்குவரவு வசதி குறைந்த நாட்களிலும் கடல் கடந்து வாணிகம் செய்து பொருளீட்டியிருக்க முடியுமா? அல்லது உள் நாட்டில்தான் பழந்தமிழக நாளிலிருந்து இன்றுவரை நாட்டு அரசியலில் நெருக்கமாகச் சம்பந்தப்பட்டிருக்க முடியுமா?

தொழில் வித்தகர் என்போர் திட்டமிட்ட சோதனைகளைத் (Calculated Risks) தன்னம்பிக் கையுடன், எண்ணியதை எண்ணியாங்கு எய்தும் உறுதியுடனும் நிர்வாகத் திறமை, ஒரு தலைவருக்குரிய தகுதிகள், தைரியம் ஆகியவற் றையும் ஒருங்கே கொண்டு ஓரளவுக்குச் சரியான முடிவுகளை எடுப்போர் என்று வரை யறுக்கலாம். இந்த வரையறைக்குள் பொதுவாக நகரத்தார் சமூகம் உள்ளடங்குகிறது என்று சரித்திரம் திரும்பத் திரும்ப நிரூபித்திருக்கிறது. தமிழக ஜனத்தொகையில் கால் சதவீதத்திலும் கால்பங்குக்கும்குறைவான நகரத்தார்சமூகத்தினர் பல துறையிலும் சிறந்து விளங்குவதைக் காண் கிறோம். பொதுவாகத் தொழில் வித்தகர்களின் பண்புகள் முறையாக வளர்க்கப்பட்டு, தொழில் துறையின் பக்கம் திருப்பிவிடப்படும் போது, அவர்கள் சிறந்த தொழிலதிபர்களாக உரு வெடுக்கின்றனர்; நாடு நலம் பெறுகின்றது. பின் தங்கிய பகுதிகள் முன்னேறுகின்றன.

தொழில் வித்தகருக்கான சிறப்புத் தகுதிகள் என்னென்ன என்றும், அவற்றோடு நகரத்தார் சமூகம் எவ்வாறு நெருக்கமாகத் தொடர் புடையது என்றும் காணலாம் :

### (i) ஒன்றை அடைய வேண்டும் அல்லது நிறை வேற்ற வேண்டும் என்ற உந்துதல்:

இது தொழில் வித்தகருக்குரிய ஒரு முக்கிய மான பண்பு. இப்பண்பின்படி (1) தனக்குத் தானே நிர்ணயித்துக்கொண்ட தரத்துடனும் (2) வெளித் தரத்துடனும் போட்டியிடுவதற்கான விருப்பமும் (3) காரியத்தில் நீண்ட காலத் தொடர்புடைமையும் இருக்க வேண்டும்.

'பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை' என்றார் வள்ளுவர். அப்பொருளைத் திரைகடலோடியு மாவது தேடு என்றனர் தமிழ் மக்கள். அக் கூற்றுக்கு ஏற்பத் தங்கள் எண்ணத்தை அடை வதில் தொடர்ச்சியாகத் தீவிரமான உந்துதல் கொண்டுள்ளனர் நகரத்தார் சமூகத்தினர். அவ்வாறு தேடிய திரவியத்தில் ஒரு பகுதியை அறத்திற்கும் வழங்குவதை ஒரு மரபாகக் கொண்டுள்ளனர்.

### (ii) சோதனை அல்லது அபாயங்களைச் (Risks)

### சந்திக்கும் பண்பும் (iii) தன்னம்பிக்கையும், விடாமுயற்சியும்

தொழில் வித்தகர் ஒரு புதிய பாதையை மேற்கொண்டு, அதன் மூலம் சாதாரணமாக வரும் அபாயங்களையும் சந்திக்கத் தயாராக இருக்க வேண்டும்.

'உழுதுண்டு வாழ்வாரே வாழ்வார்' என்றார் வள்ளுவர். பொருளாதார நடவடிக்கைக்கு விவசாயமே அடிப்படை என்பது பல பொருளாதார நிபுணர்களின் கருத்து. அக்கருத்துக்கு ஒப்ப, கடல் கடந்து வியாபாரம் செய்த நாடான பர்மாவிலுங்கூட நகரத்தார் பெரும்பான்மை நிலங்களைப் பண்படுத்தி, விளைச்சலைப் பெருக்கி, அந்நாட்டின் பொருளாதாரத்தை மேம்படுத்த உதவினர். அந்நாட்டு நிலைமைகள் மாறிய போது நகரத்தார் எல்லாவற்றையும் இழந்து அல்லது துறந்து தாயகம் வந்து சேர்ந்தனர். ஆயினும் அவர்கள் சோர்ந்துவிடவில்லை. யார் யாருக்கோ, எந்தெந்த நாடுகளுக்கோ பயன் படுத்திய தமது முயற்சியைத் தாயகத்தின் வளர்ச்சிக்குச் செலவிடத் தொடங்கினர், அவ்வளவுதான்.

கிராமக் கடன் இடைவெளியை நகரத்தார் வட்டித் தொழில் செய்வதன் மூலம் நிறைவு செய்து கிராமப் பொருளாதாரத்தை மேம் படுத்தியதோடு, தாமும் வளம் பெற்று வந்தனர். அரசாங்கம் கடுமையான சட்டங்களை இத்துறையில் கொண்டுவந்தவுடன் அவ்வபாயங்களையெல்லாம் சந்தித்துத் திருப்பப் பெற முடிந்த அளவுக்குப் பணங்களை வசூல் செய்து, பிற துறைகளில் தங்கள் பணத்தையும் ஆற்றலையும் செல வழித்துத் தொடர்ந்து நாட்டு முன்னேற்றத் துக்குப் பாடுபட ஆரம்பித்துவிட்டனர்.

### (iv) விளைவுகளுக்கான பொறுப்பை ஏற்றுக் கொள்ளும் தன்மை:

பிறரை அல்லது பிறவற்றைக் காரணம் காட்டாமல் வெற்றியோ தோல்வியோ தாம் செய்த காரியத்துக்கான பொறுப்பைத் தாமே ஏற்பது. இப்பண்பும் நகரத்தாரிடம் அதிகம் உள்ளது.

### (v) செல்வாக்கின் (influence) தேவை :

தன்னைச் சூழ்ந்துள்ள பொருள்களையும், மற்றவற்றையும் தன் செல்வாக்கின் மூலம் பயன் தரும் வகையில் மாற்ற முடியும் ; மாற்ற வேண்டும் என்று நம்புவது.

இப்பண்பை நகரத்தார் கொண்டிருப்பதை எடுத்துக் காட்ட ஒரே ஓர் உதாரணம் கொடுத்தால் போதுமானது. காரைக்குடியிலுள்ள மத்திய இரசாயன ஆராய்ச்சி நிலையம் டாக்டர் அழகப்பச் செட்டியாரின் முயற்சியாலும் செல் வாக்காலும் வந்ததுவே.

### (vi) சந்தர்ப்பத்தை உணரும் தன்மை :

தனக்குள்ளும் வெளியிலும் மறைந்துள்ள இருப்புச் சக்தியை (potentiality) உணர்ந்து அதைத் தன் வளர்ச்சிக்குப் பயன்படுத்திக் கொள்வது.

பத்திரிகைத் துறையாகட்டும், வங்கித் தொழிலாகட்டும் பிற தொழில் துறைகளாகட்டும், தற்கால விஞ்ஞானமாகட்டும் எல்லாவற்றிலும் நகரத்தார் தங்களின் மறைந்துள்ள இருப்புச் சக்தியை வெளிக்கொணர்ந்து வளர்ச்சிக்குப் பயன்படுத்தித்தான் வருகின்றனர்.

### (vii) உயர்ந்த நோக்கும் ஒளிமயமான எதிர்காலத் திற்குமான நம்பிக்கையும் :

சுற்றுச்சூழ்நிலையில் நடப்பதை முழு அளவில் உணரக்கூடியவராயிருக்கையிலேயே ஒளி மயமான எதிர்காலத்தை அடைவதில் நம்பிக்கை உடையவராகவும் இருக்க வேண்டும்.

'வெள்ளத்தனைய மலர்நீட்டம் ; மாந்தர்தம் உள்ளத் தனையது உயர்வு' என்பார் வள்ளுவர். அதாவது, உயர்வை அடைந்திருந்தால் தலைப்பில் குறிப்பிட்ட பண்புகளையும் கொண்டிருந் திருக்க வேண்டும். நகரத்தார் அன்றும் இன்றும் இலக்கியம், வர்த்தகம், சினிமா அரசு, போன்ற பல துறைகளில் உயர்நிலையிலிருப்பது உயர்ந்த நோக்கையும், ஒளிமயமான எதிர்காலத் திற்கான நம்பிக்கை கொண்டிருந்ததையும், கொண்டிருப்பதையுமே காட்டுகிறது.

### (viii) ஒன்றை ஆரம்பிப்பதில் (to initiate) விருப்பம் :

மற்றவரின் யோசனையில் மகிழ்ந்து நடக்க விரும்புவதைவிடத் தானே ஒன்றை முன்னின்று ஆரம்பித்து நடத்துவதில் விருப்பம். அதன் காரணமாகச் சுயத் தன்மையையும், உருவாக்கும் தன்மையையும், பிரச்சினைகளுக்குப் பல வித மாற்று விடைகளைக் கொண்டிருப்பது போன்ற தன்மைகளையும் உடையவராகிறார்.

நகரத்தாரில் பலர் புதுப்புதுத் துறைகளில் பல பொது வரையறுக்கப்பட்ட கம்பெனிகளை (Public Limited Companies) உருவாக்கியும், நிர்வகித்தும் வருவது இப்பண்புக்குச் சான்று.

(ix) **சவாலை ஏற்பதில் விருப்பம் :**

திறமைக்கு மிஞ்சியது என்பதையும் ஏற்று வெற்றிகரமாக முடிக்கும் தன்மை.

நட்டத்தில் ஓடிய பொதுத்துறை நிறுவனங்களைச் சரிப்படுத்த கடந்த காலத்தில் அரசால் அமைக்கப்பட்ட குழுக்கள் சிலவற்றில் நம்மவர் பங்கு வகித்ததும், தலைமை தாங்கியதும் நினைவு கூரத்தக்கது.

(x) பிறரைப் பின்பற்ற விரும்புவதைவிடச் சிந்தனையிலும், செயலிலும் சுதந்தரமாயிருத்தல், (xi) பிரச்சினைகளைச் சமாளிக்கும் தன்மை, (xii) இருப்பதை அப்படியே ஏற்றுக்கொள்வதைவிட தனக்கு வசதியாகச் சுற்றுச் சூழ்நிலைகளை ஆராய விரும்பும் தன்மை, (xiii) காலத்திற்கு மதிப்பு ஆகியவையும் ஒரு தொழில் வித்தகருக்கு அவசியமான பண்புகள் ஆகும். நகரத்தாரில் பலர் இவற்றைக் கொண்டிருக்கின்றனர். சான்றுகளும் உள.

(xiv) **விளைவுகளைத் தெரிந்துகொள்வதிலும், தெரிந்த விளைவுகளிலிருந்து பாடம் கற்றுக்கொள்வதிலும் ஆர்வம் ;**

இலங்கையிலும் பர்மாவிலும் நமக்கு ஏற்பட்ட அனுபவங்களின் காரணமாக நம்மவர் ஓரளவுக்குப் புத்திசாலித்தனமாக மலேசியாவிலும் சிங்கப்பூரிலும் நடந்துகொண்டிருக்கின்றனர். இந்நாடுகளில் தாங்கள் ஈட்டிய செல்வத்தைத் தாயகம் கொணர்ந்து இங்கு பல விதங்களில் ஈடுபடுத்தி வருகின்றனர்.

(xv) **செய்த காரியங்களில் திருப்தி அடைந்து தேங்கி நின்றுவிடாதிருப்பதும் மாற்றத்துக்கான விருப்பமும் :**

அப்போதுதான் புதுப் புதுக் காரியங்களை மேலும் மேலும் திருந்திய முறையில் செய்ய முடியும். இப்பண்பும் நகரத்தார்க்குப் புதிதன்று.

**இளைய தலைமுறையினருக்கு ஒரு வார்த்தை :**

தொழில் வித்தகருக்கான பண்பை ஊன்றிக் கவனித்து, அவற்றைத் தமக்கு முந்திய தலைமுறையினர் கொண்டிருந்ததைச் சிந்தித்துப் பார்த்து, அதைவிடச் சீரிய முறையில் பெற முயற்சி செய்ய வேண்டும். எண் திசையிலும், பல் தொழிலிலும் புகழ் பெற வேண்டும். நம் இல்லங்களுக்கு "அன்றைக்குவந்த இலக்குமியை என்றைக்கும் நீங்காது இரு"க்கச் சொல்லிப் பாடிய பாடுவார் முத்தப்பச் செட்டியார் போன்றோரின் நல்வாக்குகள் இம்முயற்சிகளில் நமக்கு எப்போதும் உதவும் என்பதில் ஐயமில்லை.

## சரித்திரத்தைப் படைத்து வெல்லும்.

சுப. விசுவநாதன், நெற்குப்பை.

ஏர்கொண்ட நெற்குப்பை நகரே சொல்லும்
ஏற்றமிகு சரித்திரத்தைப் படைத்து வெல்லும்!
சீர்கொண்ட சாத்தப்பர் உயர்ந்த உள்ளம்
சீராட்டும் நூற்ருண்டில் உவகை வெள்ளம்!
கார்நாணக் காலமெல்லாம் ஈந்த வண்மை
கணக்கின்றி அறம்வளர்த்த பெருமை உண்மை!
பார்போற்ற தர்மங்கள் செய்தார் நன்று
பைந்தமிழ்போல் வாழ்வாங்கு வாழ்வார் வென்று. 1

தேங்குபுகழ் உயர்பள்ளி புகழை நாட்டும்!
தேரிழுக்கும் சங்கிலியோ பேரைக் கூட்டும்!
பாங்கான பொதுப்பணிக்கு மடமே தஞ்சம்!
பாடுதமிழ்ப் பாராட்டும் கருணை நெஞ்சம்!
வாங்குங்கை வருந்திடவே அன்ன தானம்!
வருவோர்கள் உளங்குளிரத் தண்ணீர்ப் பானம்!
ஓங்குபுகழ் இலங்கையே பாடும் வண்ணம்
ஒப்பில்லாச் சிவத்தொண்டு வாழ்த்தும் திண்ணம்! 2

# சாத்தப்பா அறப்பணிக்கு அகமகிழ் பாராட்டுரை

எஸ். வேங்கடகிருஷ்ணன், பி. ஏ., பி. எஸ்ஸி., பி. டி.,
தலைமை ஆசிரியர்,
ஆறுமுகம் பிள்ளை அரசினர் உயர்நிலைப்பள்ளி,
திருப்பத்தூர்.

நெற்குப்பையில், சாத்தப்பா அற நிலையம் தோற்றுவித்து நூறாண்டுகள் நிறைவெய்துவதை முன்னிட்டுச் சீரோடும், சிறப்போடும் நடத்தும் நூற்றாண்டு விழா நினைவாக, மலர் ஒன்று வெளியிடுவதறிந்து மட்டற்ற மகிழ்வெய்துகிறேன். சாத்தப்பா அற நிலையத்தின் சார்பாகப் புதுப் பொலிவோடு திகழ்ந்து வரும் சாத்தப்பா அரசினர் உயர்நிலைப் பள்ளியில், 1964 முதல் 73 வரை தலைமை ஆசிரியராகப் பணியாற்றும் பேற்றினைப் பெற்ற நான், சாத்தப்பா அறப்பணி பற்றி இம் மலரில் எழுதுவதில் எல்லையற்ற இறும்பூதெய்துகிறேன்.

ஆலயப் பணியையும், கல்விப் பணியையும் அயராது புரிந்து, தமிழகத்தின் வரலாற்றில் கொடைக்காகத் தனியிடம் பெற்ற நகரத்தார் மரபில் சாத்தப்பாகுடும்பம் குறிப்பிடத்தக்கஒன்றாகும். 1956-இல் சா.பழ.மு.சா. நாச்சம்மை ஆச்சி அவர்கள் கொடுத்த அன்புக் கொடை ரூ. 8250-ம் சாத்தப்பா குடும்பத்தின் அளப்பரும் முயற்சியும் பொதுமக்களின் பேராதரவும், முன்னாள் மாவட்டக் கழகத் துணைத்தலைவர் திரு. L.RM.L. இராமநாதன் செட்டியார் அவர்களின் தலைமையின்கீழ் ஒன்று சேர்ந்து 'சாத்தப்பா அரசினர் உயர்நிலைப் பள்ளி'யாக உதயமானது அனைவரும் அறிந்ததே. தனியார் பள்ளிக்கு இத்தகைய நன்கொடை அளிப்பதைக் கேள்விப்பட்டுள்ளோம். அரசினர் நடத்தும் ஓர் உயர்நிலைப் பள்ளிக்கு இவ்வாறு அடுக்கடுக்காக அலுக்காமல் நன்கொடை அளிக்கும் அறச்சிந்தையுள்ள குடும்பத்தைக் காண்பது அரிது. பள்ளிக்குத் தேவைப்படும் மரத்தளவாடங்களானாலும் சரி, தேசியத்தலைவர்களின் படங்களானாலும் சரி, சொன்னவுடன் மிக நேர்த்தியாக வியக்கத்தக்க விதத்தில் கொண்டுவந்து கொடுத்து விடுவார்கள். சாத்தப்பா அறக்குழு நீங்கலாகத் தனிப்பட்ட முறையிலும், அக்குடும்பத்தைச் சேர்ந்த கரு. சா. முத்துக்கருப்பன் செட்டியார் அவர்கள் தம் மணிவிழாவின் போது ரூ 350/- பெறுமான மின் விசிறியையும், சா.கரு. சாத்தப்ப செட்டியார் அவர்கள் ரூ. 175/- பெறுமான சுவர்க் கடிகாரம் ஒன்றையும் ஈந்துள்ளார்கள். தவிர, ரூ. 1500/-பெறுமான மோட்டார் பம்பு செட் 1-ம் மனமுவந்து கொடுத்துள்ளார்கள். இவ்வாறு அக்குடும்பத்தவர் தனிப்பட்ட முறையில் அளித்துள்ள நன்கொடைப் பொருள்களைப் பட்டியல் போட்டுச் சொன்னால் இம்மலரில் இடம் போதாது.

இராமநாதபுர மாவட்டத்தில் 5ப கழக உயர்நிலைப் பள்ளிகள் திறக்கப்பட்டதையொட்டி ஒருசிறப்பு விழா நெற்குப்பை சாத்தப்பா மடத்தில் நடைபெற்றது. அவ்விழாவைக் கொண்டாட இம் மாவட்டத்திலேயே, நெற்குப்பையைத் தேர்ந்தெடுத்தது சாத்தப்பாவின் கொடைப் புகழினாலேயாகும். விழாவில் கலந்துகொண்ட முன்னாள் மாவட்டக் கழகத் தலைவர் திரு. S. இராமசாமி நாயுடு, M.A., B.L அவர்களும், பள்ளிக்கல்வி நெறியாளர் திரு. நெ. து. சுந்தரவடிவேல் அவர்களும் சாத்தப்பாவின் அறப்பணியை வாயார மனமாரப் பாராட்டியது, இன்னும் நம் செவிகளில் ஒலித்தவண்ணம் உள்ளது. அறிவியல் ஆய்வுக் கூடம் பள்ளியில் கட்டுவதற்காக அரசு அளித்த ரூ. 2500 - உடன் பள்ளிக் கல்விக் குழு என்ற முறையில் தாமே பொறுப்பேற்று ரூ. 7000/-ஐ அதிகமாகச் செலவு செய்து சிறந்த உறுதியான

கட்டடத்தைக் கட்டி, முன்னாள் அமைச்சர்களைக் கொண்டு திறப்பு விழா நடத்தினார்கள். பள்ளியில் ஆண்டுதோறும் நடைபெற்று வரும் ஆண்டு விழா, விளையாட்டு விழாக்களுக்கு ஏராளமான பரிசுப் பொருள்களை அளிப்பதுடன், விழா சிறப்புறத் தலைமையாசிரியர், உதவி ஆசிரியர்களுடன் தோளோடு தோள் நின்று அனைத்துத் துறைகளிலும் ஆன்ற பேருதவி செய்வது மறக்கவியலாத ஒன்றாகும். சாத்தப்பா குடும்பத்திலுள்ள அனைவரும் அளப்பரிய தொண்டினை ஆற்றியுள்ளார்கள். அவர்கள் பெயர்களைத் தனித்தனியே குறிப்பிட ஆசையிருந்தும் இடம் போதாமை கருதிப் பொதுவாகவே குறிப்பிட்டுள்ளேன்.

சுப்பிரமணிய சுவாமிகோவிலில் ஆண்டுதோறும் நவராத்திரி விழாவை எல்லோரும் பாராட்டும் முறையில் மிகச்சிறப்பாகச் சாத்தப்பா குடும்பத்தினர் நடத்தி வருகிறார்கள். தவிர, ஆண்டுதோறும் சித்திரையில் சாத்தப்பா அறக்கட்டளையை நிருவகிக்கும் பொறுப்பை ஒவ்வொரு குடும்பத்தாரும் மாறி மாறி ஏற்று உற்சாகமாக நடத்தி வருவது பாராட்டத்தக்கதாகும்.

அவர்களின் அறப்பணிக்கு மற்றைய நாட்டார்-நகரப் பெருமக்களும் உறுதுணை புரிவது வேறெங்கும் காணவியலாத ஒன்றாகும். அறப்பணிக் குழுவின் சார்பாக 'ஆசிரியர் அலுவலர் குடியிருப்பு ஏற்படுத்த' அவர்கள் மனத்தில் ஓர் நல்லெண்ணம் கால்கொண்டுள்ளது. அவ்வெண்ணம் ஈடேறுவது அவர்களின் அறப்பணிக்கே சிகரமாக அமையும்' விரைவில் ஆசிரியர் - அலுவலர்களுக்கான குடியிருப்புக் கவலை நீங்குமென ஆவலுடன் எதிர் நோக்குகிறேன். நூற்றாண்டு விழா நினைவாகப் பள்ளிக்குச்சுற்றுச் சுவர் எழுப்பி இரும்புக்கதவும் போட முன்வந்துள்ளது போற்றத்தக்கதாகும்.

காரைக்குடிக்கு வள்ளல் அழகப்பாவைப்போல நெற்குப்பைக்கு அறிவுத்துறையிலும் ஆன்மீகத் துறையிலும் ஈடேற்றம் செய்யசாத்தப்பா கிடைத்துள்ளார்கள். அன்னாரின் புகழும், அவர்தம் குடும்பத்தின் புகழும் பெருமைகளும் அறப்பணிகளின் மூலம் நாளும் நாளும் சிறந்திட எல்லா வல்ல இறைவனை மனமொழி மெய்களால் இறைஞ்சுகிறேன்.

---

# அறம் காக்கும்
# இராம. சா. குடும்பம்

சு. சுந்தரராசன், B.A., B.T.,
தலைமை ஆசிரியர்,

### அன்னை தமிழின் அடியிணை தொழுவோம்

அங்கிங்கெனாதபடி எங்கும் நிறைந்ததும், உலகெலாம் உணர்ந்து ஓதற்குரியதுமான உயர்தனிச் செம்மொழியாம் எம் அன்னை தமிழின் இணை மலரடிகளை இருகரங்குவித்து ஒருமனதுடன் வாழ்த்தி வணங்கி, சாத்தப்பா அறக்கட்டளையின் அரும் பெரும் சாதனையாகத் திகழும் உயர் பெரும் நிறுவனமாக நின்றிலங்கும் எமதரும் பள்ளியின் தனித்தன்மை குறித்தும், மதிப்பிற்குரிய இராம. சா. குடும்பத்தார் அரிதின் முயன்று ஆக்கிய அறக்கட்டளை குறித்தும் இக்கட்டுரையின்கண் விளக்க முயல்கிறேன.

### நாடும் ஊரும்

பாருக்குள்ளே நல்ல நாடு எம் பாரத நாடு. அப்பாரதத் தாயின் திலகமெனத் திகழும் தமிழகம் தன்னில் முந்நூறு ஊர்த்தே தண்பறம்பு நன்னாடு. அத்தண்பறம்பு நாட்டின் நெற்களஞ்சியமெனத் திகழ் நெற்குப்பை நன்னகரதனில், அத்திலக வாசனை போல் எத்திசையும் புகழ் மணக்கும் இராம. சாத்தப்பா குடும்பம் செய்துள்ள அறங்கள் நினைந்து நினைந்து போற்றற்குரியனவாகும்.

### அறங்காவலர் சாத்தப்ப செட்டியார் அவர்கள்

'அன்ன சத்திரங்கள் ஆயிரம் அமைத்தலிலும் ஆலயம் பதினாயிரம் நிறுவுதலிலும் ஆங்கோர் ஏழைக்கு எழுத்தறிவித்தல் சாலச்சிறந்ததாகும்' என்ற பாரதியின் நயமிகு சொல்லைப் பயன்பெறக் கற்றுய்ந்த அறங்காவலர் சாத்தப்ப செட்டியார் அவர்கள் நினைவாலயமாகக் கலைக்கூடம் கண்டனர்; கண்ணெனக் காக்கின்றனர்; எண்ணிலாப் புகழ் கொண்டனர்.

### அன்னை நாச்சம்மை ஆச்சியின் அருந்தகைமை

அந்நாள் இராமநாதபுர மாவட்டக் கழகத் துணைத் தலைவர் உயர்திரு. லெ. ராம. லெ. இராமநாதன் செட்டியார் அவர்களின் திறன்மிகு சிந்தனை நலத்தாலும், உற்றுழி உதவும் உயர்குணச் செம்மனம் படைத்த அன்னை சா. பழ. மு. சா. நாச்சம்மை ஆச்சி அவர்களின் ஈத்துவக்கும் பண்பால் ஈந்த பெருந்தொகையாலும் இராம. சா. குடும்பத்தார் எம்பள்ளியினை நிறுவினர். இந்நகர்சூழ் கிராமத்தார் இடையே அறியாமை இருளை நீக்கி, அறிவொளியை ஏற்றிய பெருமையை ஏற்றனர். நிலையான புகழை நாளும் பெறுகின்றனர்.

### சாத்தப்பா கழக உயர்நிலைப்பள்ளியின் தொடக்கமும் வளர்ச்சியும்

சாத்தப்பா கழக உயர்நிலைப்பள்ளி 11-6-56ஆம் நாளில் தோற்றுவிக்கப்பெற்றது. 18-6-56-ஆம் நாளன்று அண்ணாமலைப் பல்கலைக் கழகக் கீழ்த்திசைக் கல்விப்பகுதித் தலைவர், பேராசிரியர், பண்டித, வித்துவான் உயர்திரு. லெ ப கரு. இராமநாதன் செட்டியார் அவர்கள் தலைமையில் இராமநாதபுர மாவட்டக் கழகத் தலைவர் உயர்திரு. S. இராமசாமி நாயுடு, M.A., B. L., M. L.A. அவர்கள் பள்ளியைத் தொடங்கி வைக்கப் பள்ளித் திறப்புவிழா இனிதே நிறைவேறியது.

முதற்கண் இப்பள்ளி இராம.சா. மடத்தில் இயங்கியது. இடநெருக்கடி காரணமாக இருபெரும் கொட்டகைகளை இன்முகத்துடன் அமைத்துத்தந்த பெருமை, சாத்தப்பா அறக்கட்டளையையே சாரும். இம்மட்டோ? பள்ளிக்கு ரூ. 50,000 மதிப்புள்ள தனிப்பெரும் கட்டடத்தையும், அதிகமானதேவைப் பொருள்களையும் தந்துதவிய பெருந்தன்மையைப்

போற்றும் தகையறியோம். செல்லுமிடமெல்லாம் ஒல்லும் வகையான் எந்தம் ஆசிரிய நண்பர்கள் இராம. சா. குடும்பத்தின் பெருமைதனைப் போற்றிப் புகழ்வார்கள்; பாராட்டி மகிழ்வார்கள்.

**எம் பள்ளியில் என் பங்கு**

நற்குணமும் நற்செயலும் கொண்ட இராம.சா. குடும்பத்தாரின் அறக்கட்டளையால் நிறுவப் பெற்ற இப்பெரும் பள்ளியில் தலைமையாசிரிய ராகப் பணியாற்றுவதில் நான் பெருமையடைகின் றேன். நன்மனம் படைத்த இரா.சா. குடும்பத்தார் கள் இப்பள்ளியால் பெருமை அடைகிறார்கள். அவர்களால் இப்பள்ளி பெருமையடைகிறது. தங்களின் புள்ளிகளில் ஒன்றாக இப்பள்ளியை எண்ணி, ஆவன செய்து வரும் இராம. சா. குடும்பத்தாரின் உயர்குணச் செயல்களை எண்ணிப் பூரிப்படைகின்றேன்.

நானும் ஆசிரியப் பெருமக்களுமாக நெற் குப்பையைச் சூழவுள்ள பட்டிதொட்டிகளுக்குச் சென்று, அரிதின் முயன்று, உயர்நிலைப் பள்ளி யில் படிக்கும் தகுதி உடைய மாணவர்களையும் மாணவிகளையும் முறையாகச் சேர்த்து, முந்தைய ஆண்டுகளைவிடப் பள்ளியின் வருகைப்பதிவை முந்நூற்றைம்பதாக உயர்த்தி உள்ளோம். இனி வரும் கல்வி ஆண்டில் மாணவர்களின் எண்ணிக்கை மேலும் உயரும் என உறுதி கூறு கிறேன்.

முன்னாள் தலைமையாசிரியர் உயர்திரு K. R. இராமசாமி, BA.,B. T. அவர்களால் தொடங்கப்பெற்ற பிடியரிசித் திட்டமும், அதன் பயனான மதிய உணவும் தொடர்ந்து சிறப்பாக நடைபெறுகின்றன. இத்திட்டம் தமிழகத்து உயர்பள்ளிகளில் காணுதல் அரிதினும் அரிதே! இத்திட்டத்தால் எம் பள்ளி பிற பள்ளிகளுக்கு முன்மாதிரியாகவும் வழிகாட்டியாகவும் விளங்கு கின்றது.

முதிர்ந்த அனுபவமும் முழுமையான தகுதி யும் வாய்ந்த ஆசிரியப் பெருமக்களின் அயரா உழைப்பால் எம் பள்ளியின் 11 - ஆம் வகுப்பு மாணவர்கள் நல்ல தேர்ச்சியை ஆண்டுதோறும் பெற்று வருகிறார்கள். தேவகோட்டைக் கல்வி மாவட்டத்தின் சிறந்த பள்ளியாகத் திகழ்கின் றது என மகிழ்வுடன் கூறிட விழைகிறேன்.

நற்பெருந் தவத்தராய இப்பெரும்பதியைச் சேர்ந்த பெருமைக்குரியவர்கள் மனமுவந்து தந்த பெருந்தொகையால் பள்ளிக்கு ஒலிபெருக்கி ஒன் றும் வாங்கியுள்ளோம். பள்ளி விசேடக் கட்டண நிதிக் குவியலிலிருந்து இப்பள்ளியின் முதன்மைக் கட்டடத்தில் தடுப்புச் சுவர்கள் எழுப்பி, தனித் தனி அறைகளாக மாற்றிப் புதுக்கியுள்ளோம்.

*1973-74, 1974-75* ஆகிய ஈராண்டுகளிலும் முறையே காரைக்குடியிலும், தெக்கூரிலும் நிகழ்ந்த மாவட்ட விளையாட்டுப் போட்டிகளில் எம் பள்ளி மாணவர்களில் இருவர் வெற்றி பெற்று, சென்னையில் நடைபெற்ற மாநில விளையாட்டுப் போட்டிகளிலும் பங்கு பெற்ற நிகழ்ச்சி எம் பள்ளி வரலாற்றின் முடிமணியாகும். ஆண்டுதோறும் இலக்கிய மன்றங்களும் நிறைவு விழாக்களும் சிறப்புற நிகழ்வது வாடிக்கை நிகழ்ச்சிகளாகும். இவை போன்ற பல்வேறு சிறப்பு நிகழ்ச்சிகளை நிறைவேற்ற என்னுடன் பணியாற்றும் ஆசிரியப் பெருமக்கள் தம் முயற்சியும், உழைப்பும் நினைந்து போற்றுதற்குரியனவாகும்.

**நூற்றாண்டு கண்ட அறக்கட்டளை**

திரைகடலோடித் திரவியம் தேடிய தன வணிகர் நன்னாட்டில் பெருஞ்செல்வம் திரட்டிய சாத்தப்ப செட்டியார் அவர்கள், ஊருணி நீர் நிறைந்தாற்போன்று உற்றுழி உதவியும் உறு பொருள் கொடுத்தும் அறக்கட்டளை அமைத்த பாங்கு போற்றுதற்குரியதாகும். அத்தகு அறக் கட்டளை தனை நூறாண்டுக்காலம் கொண்டு செலுத் திய அக்குடும்பத்தாரின் தந்நலம் போற்றாப் பான்மையும், பிறர் நலம் பேணும் பெற்றியும் எண்ணி மகிழ்தற்குரியனவாகும். மனத்துக்கண் மாசற்ற மன்னுபுகழ் இராம.சா. குடும்பத்தாரை மனம் மகிழ, வாய் மணக்கப் பாராட்டுவதில் பெருமையடைகிறேன்.

வாழ்க சாத்தப்பா குடும்பம் !

வளர்க அவர்தம் அறக்கட்டளை!

# வள்ளல் சாத்தப்பா வில்லுப்பாட்டு

து. ஆனந்தன்

## நாட்டு வருணனையும் குடும்ப வரலாறும்

முத்தமிழும் முழங்கியதாம்....முழங்கியதாம்
எத்திசையும் புகழ்மணக்கும்....புகழ்மணக்கும்
முக்கண்ணனும் உமையம்மையும் .... உமையம்மையும்
அவதரித்த திருநாடாம்....திருநாடாம்
பாண்டிநாட்டின் பெரும்பதியாம் .... பெரும்பதியாம்
பாவலர்கள் போற்றுமவன் .... போற்றுமவன்
காண்பவரின் மனங்கவரும் .... மனங்கவரும்
பாரிவள்ளல் ஆண்டவூராம்.... ஆண்டவூராம்
நெற்குப்பைப் பெருநகரில்....பெருநகரில்
உற்றவர்க்கு உவந்தளிக்கும்....உவந்தளிக்கும்
கொற்றவராம் பழனியப்பர்....பழனியப்பர்
பெற்றெடுத்த நற்புதல்வன்....நற்புதல்வன்
பெருவளம்சேர் இராமநாதன்....இராமநாதன்
செய்தவத்தால் பிறந்தமகன்....பிறந்தமகன்
பெருமைகொண்ட சாத்தப்பனும்.... சாத்தப்பனும்
உருவமிகு பேரழகன்....பேரழகன்
தருமிக்கு பொன்னளித்த .... பொன்னளித்த
சிவபெருமான் பெருமகனும் ....பெருமகனும்
திருமுருகன் திருவருளால் .... திருவருளால்
வளர்மதிபோல் வளருநாளில் .... வளருநாளில்

தழைத்தமனம் கொழுத்தபணம் நிலைத்தஅறம் கொண்டோர்
முளைத்தகுலக் கொழுந்தெனவே வளர்த்தபெருஞ் சாத்தப்பனை
கலைத்தமிழைப் பயின்றிடவே நிலைத்தபெரும் பள்ளிதனில்
குறைவயதில் நிறையறிவ பெற்றிடவே வைத்திட்டார்.

விளைந்தபயிர் முளைத்தகாலை அறிதரல்போல் பயின்றுன்
பழித்தலிலாப் பெருமரங்கள் பசுமரத்து ஆணியென
உழைத்தநறும் நெஞ்சினிலே உறுதியாகப் பதிந்தனவே
களைப்படையா மனமுடையான் கலைபலவும் பயின்றிட்டான்..

ஆளான் மங்கையாம் வள்ளியாச்சியை....வள்ளியாச்சியை
கண்ணுக் கினியாளாம் கற்பரசியை....கற்பரசியை
தாளாளன் பேரழகன் சாத்தப்பன்...சாத்தப்பன்
தாலிபூட்டி மனைவியாக் கொண்டாரையா....ஆமாமா
கற்றவர்கள் சொன்னதர்மம் கடவாமல்....கடவாமல்
உற்றவர்க்கும் மற்றவர்க்கும் உதவிசெய்தார்....உதவிசெய்தார்
பெற்றவர்கள் மனமகிழப் பெருந்தவத்தால்....பெருந்தவத்தால்
உற்றமக்கள் நால்வரையே பெற்றெடுத்தார்....
ஆமா பெற்றெடுத்தார்

## பஞ்சத்தில் கஞ்சி வார்த்தது

ஐயா, நானென்ன எழுதுவேன்.....அவர்திறமை
அஞ்சா நெஞ்சன் ஆணழகன் தன்னை
பஞ்சாங்கம் பார்க்கும் பார்ப்பனன் முதலாய்
பஞ்சமே உருவான பாட்டாளி ஈறாய்
தஞ்சமே அடைந்தார் தனிவணிகர் சாத்தப்பரைச்
சிங்களவன் தமிழன் எங்களவன் என்று
தங்குபுகழ் கொண்டு கஞ்சிதனை என்றும்
பஞ்சம்வந்த காலத்துத் தஞ்சமுற்ற பேர்களுக்குக்
கொஞ்சமும் குறைவின்றிக் கொடுத்தாரையா !

## கள்ளர்களின் கொடுமை

வந்தாரே ! வந்தாரே ! கள்ளர்களும் .... கள்ளர்களும் !
மனைதோறும் புகுந்தாரே கொள்ளையிட .... ஐயா
பேசாதே ! பேசாதே ! என்றுசொல்லி .... என்றுசொல்லி
கையையும் வாயையும் கட்டிவிட்டார்....ஐயா
உடைத்தாரே ! உடைத்தாரே ! பெட்டகத்தை.... பெட்டகத்தை
கட்டியே எடுத்தாரே கட்டிப்பொன்னை....ஐயா !
தகர்த்தாரே ! தகர்த்தாரே ! கள்ளர்களும் .... கள்ளர்களும்
நகரத்தார் கடையெல்லாம் நாசஞ்செய்தார்——ஐயா

ஈட்டிய பொருளும் ஈட்டிய பொன்னும்
நீட்டிய கம்பும் கொண்டுவந்தா ரையா !
மாட்டிய கத்தியும் வீசிய கையும்
பாயும் புலிபோல் பதுங்கி வந்தாரையா !
காண்பவ ரெல்லாம் கதறியழ
காட்டுமிருகம் போல் பாய்ந்து வந்தாரையா !
தாண்டிக் குதித்து ஓடிய கள்ளரும்
சாத்தப்பர் வீட்டை அடைந்தனரே !

போகாதீர் ! போகாதீர் ! நண்பர்களே .... நண்பர்களே !
போசனம் தந்தாரே ஏழைபங்காளன் ....ஐயா !
திருடாதீர் ! திருடாதீர் ! தம்பிகளே.... என் தம்பிகளே !
தருமத்தின் சொத்திது ஏழையின் பொருளே—ஐயா !

## அறம் பெருக்கும் குடும்பம்

தலைமுறையாக அறம்பல பெருக்கிப்
பேணி வளர்த்தது ராமசா குடும்பம்
விதவிதமாகத் தொழில்பல ஆக்கி
விரைந்து முடித்தது ராமசா குடும்பம்
பரியா மருதப்பட்டி தேர்ச்
சங்கிலி செய்ததும் குடும்பம் —ராமசா குடும்பம் (தலை)

நாட்டு மக்கள் குடிக்கத் தண்ணீர்ப்
பந்தல் வைத்ததும் ராமசா குடும்பம்
வாட்டும் பஞ்சம் போக்கக் கஞ்சி
வார்த்துக் காத்ததும் ராமசா குடும்பம் (தலை)

வேலாயுதர் கோயில் விநாயகப்
பானை வைத்ததும் ராமசா குடும்பம்
ஆலயந் தோறும் அழகாய்
அபிஷேகம் செய்வதில் அவர்க் கீடில்லை (தலை)

சுப்பையா கோவில் கொலு
வைத்ததும் ராமசா குடும்பம்
மடத்தில் பள்ளியை வைத்துப்
பேணி வளர்த்துக் காப்பது ராமசா குடும்பம் (தலை)

வாழிய வாழியவே நம்பள்ளி வாழிய வாழியவே
சூழ்கலி நீங்கித் துயரங்கள் மாய்ந்து
பாழ்மதி படைத்தோர் பகைமையைப் போக்கிச்
சூழ்கடல் உலகில் அழியாப் புகழும்
தாழ்விலா ஒழுக்கம் மாணவர் பெற்றே—வாழிய.

# நெற்குப்பை பேரூராட்சியின் முக்கிய குறிப்புகள்

1. நெற்குப்பை பேரூராட்சியின் மொத்த ஜனத் தொகை — 6685-1971-ம் ஆண்டுக் கணக்கெடுப்புப்படி
2. இப்பேரூராட்சியின் விஸ்தீரணம் — 5 Sq. m.
3. இப்பேரூராட்சியின் தலைவர் பெயர் — திரு. ஆர். எம். ராமநாதன் செட்டியார்
4. ,, உப-தலைவர் — திரு. அழ. பொய்யாமொழி
5. ,, நிர்வாக அலுவலர் பெயர் — திரு. எம். மலைமேகம்
6. இப்பேரூராட்சியின் உட்கடைக்கிராமங்கள் —
   1. பூசணிக்களம்
   2. புரந்தன்பட்டி
   3. சிந்தாவடிக்களம்
   4. செம்பள்ளம்
   5. நீலமேகம்பட்டி
   6. பள்ளத்துப்பட்டி
   7. வடுகபட்டி
   8. இ. மேலத்தோப்பு
   9. இடையன்பட்டி
   10. கிளாமடம்
   11. பரியாமருதுபட்டி
   12. பொட்டாவெளிக்களம்
   13. தோழன்களம்
7. மொத்த வார்டுகள் — 12
8. உறுப்பினர்களின் எண்ணிக்கை — தலைவர், ஒதுக்கப்பட்ட உறுப்பினர் சேர்த்து மொத்தம் 15 உறுப்பினர்கள்
9. முக்கிய அலுவலகங்கள் —
   1. தமிழ்நாடு மின்வாரியம்
   2. காவல் நிலையம்
   3. தபால் தந்தி நிலையம்
   4. இந்தியன் பாங்க்
   5. T. C. M. ஸ்டோர்ஸ்
   6. P. W. D. ஆபீஸ்
   7. கூட்டுறவு பால் விற்பனைச் சங்கம்
   8. ஆரம்ப சுகாதார நிலையம்
   9. ரெவின்யூ ஆபீஸ்
   10. தொலைபேசி நிலையம்
   11. கால்நடை மருத்துவக் கிளை நிலையம்
10. பள்ளிக்கூடங்கள் —
    1. உயர்நிலைப்பள்ளி = 1
    2. பஞ்சாயத்து யூனியன் பள்ளிகள் = 4
    3. தனியார் பள்ளி = 1
11. பள்ளியில் பயிலும் மாணவ மாணவிகளின் எண்ணிக்கை — 3250
12. இப்பேரூராட்சியின் ரெவின்யூ குருப் — நெற்குப்பை
13. குடிநீர் வசதிகள் —
    1. கிணறுகள் = 15
    2. குழாய்க்கிணறுகள் = 2
    3. மேல் நீர் நிலைத்தொட்டி = 3
    4. ஊருணிகள் = 8
14. கோவில்கள் —
    நகர சுப்ரமணியசுவாமி கோவில் 1
    சிவன் கோவில் 1
    பிடாரி அம்மன் கோவில் 1